க்காகபோகங்களை ஆசிக்கிறான். ஓய் நசிகேதரே நீர் போகங்களை எல்லாம் தியாகம் செய்து
போட்டபடியால் நவரத்னமயமும் ஸகலமனுஷ்யர்களும் மோகிக்கத்தக்கதுமான அனேகம்மா
லையை ஸம்மானமாக நானுமக்குத்தருகிறேன். வித்தைஅவித்தை இவ்விரண்டுமொன்றுக்கொ
ன்று விபரீதமாகையால் தூரமுள்ளதுகளிதுகளில் வித்தையை மட்டும் நீரபேக்ஷித்தபடியா
லும்மைகாமங்களாசப்படுத்தவில்லை அவித்தைக்குள்ளிருந்து கொணடுதன்னால்தைரியப்பட்டு
தன்னை பண்டிதனாகத்தானே எண்ணிக்கொண்டு குருடனால் குருடன்போல் மூடர்கள் பிரமித்
தலையுகிறார்கள் பணத்தின் மோகத்தால் மூடனானவனுக்கு மறணமுண்டென்ற எண்ணமேவரா
து. இந்த பூலோகமேயுள்ளது பரலோகமில்லை என்றுவது இந்த பரலோகமில்லை என்றுவது
எண்ணினவனடிக்கடி என் வசத்தையடையுகிறான். எவன் கேழ்க்கவே துர்லபனோ எவனைக்
கேட்டவர்களுமரியமாட்டார்களோ அந்த ஆத்மாவைச்சொல்லுகிறவன் கேழ்க்கிறவன் அரியு
கிறவன் நல்நடத்தையுள்ளவனும் ஆச்சரியம் துர்லபனென்றரியத்தக்கது இவ்வார்த்தை மந்த
னான மனுஷ்யன் அறியத்தக்கதில்லை. அநேகந்தரம் சிந்தித்துப்பார்த்தபோதிலும் நன்றாக அரி
யமாட்டாரன் அணுவுக்குமணுவான இவ்வாத்மாதர்க்கிக்கக்கூடாதவன் அத்துவைதனாகச்சொ
ல்லப்பட்ட இவனிடத்தில் நிஷ்டையடைந்தவனுக்கு பரலோகத்தைக் குறித்துப் போகவேண்
டியதில்லை இந்தப்புத்தியை தர்க்கத்தால் கெடுக்கக்கூடாது ஆத்மாவை அரியுகிறதற்காகவே
அன்னியனாகிய ஈசனால் சொல்லப்பட்டது எந்த புத்தியை நீரடைந்து ஸத்தியத்தில் தைரிய
முள்ளவராக இருக்கிறீரோ அந்தப்புத்தியுள்ள உமக்கு ஸமானமாக கேழ்க்கிறவர் நமக்கு
கிடைக்கமாட்டார். அந்தமுள்ள இவ்வஸ்துக்களெல்லாம் அனித்தியமென்று நானறியுவேன்.
அனித்தியங்களாலந்த நித்தியவஸ்துவடையத்தக்கதில்லை ஆகையால் பூர்வமனித்தியங்களானத்
திரவியங்களா லக்னிசயனமென்றயாகத்தை நான் செய்து அனித்தியங்களான இவ்வைசுவரிய
ங்களை அடைந்திருக்கிறேன் இவ்வாசையத்த நீர்மகானுபாவர் நித்தியமான ஆத்மவித்தைனய
நீரபேக்ஷித்தீரல்லவா அவ்வாத்மாவருத்தப்பட்டு தெரிசனம் செய்யத்தக்கனவர் இந்ததேகத்தி
லனுப்பிரவேசித்து இரகஸ்யராக ஹிரதயகுகையிலிருக்கிரவரும் புராணருமான ஆத்மாவை
அத்தியாத்மயோகத்தால் நன்றாகஅரிந்துதைரியமுள்ளவன் சோகமோகங்களை விடுகிறான்இந்த
பிரம்மாத்மைக்கியத்தை குருமுகமாககேட்டத்தியாத்மயோகத்தால் நன்றாகஅடைந்து சரீராதி
தர்மத்தைத்தள்ளி ஸூக்ஷ்மமும் ஸந்தோஷிக்கத்தக்கனதுமான பதத்தையடைந்து.ஸந்தோ
ஷிக்கிறான் நசிகேதனென்றஉம்மை யப்படிப்பட்ட ஸந்தோஷமுள்ளவரும் ஜ்ஞானவரணமத்த
வருமாக எண்ணுகிறேன்நசிகேதன் தர்மாதர்மங்களுக்கும் புண்ணியபாபங்களுக்கும்சென்றதி
ருக்கிரதுகளுக்குமதீதமானஎதைதாங்கள்பார்க்குரீர்களோஅதைஎனக்குச்சொல்லுங்கள்யமன்
எந்தபதத்தை ஸகலவேதங்களும் சொல்லுகிரதுகளோ செய்யப்பட்டதவங்களாலெதையடை
யத்தக்கதாகப் பெரியோர்கள் சொல்லுகிரார்களோ எதைஇச்சிக்கிரவர்கள் குருகுலவாஸம்
முதலானதுகளைசெய்கிரார்களோஅந்தபதத்தையுமக்குச்சுருக்கமாகச் சொல்லுகிறேன்இந்த
அக்ஷரமான பிரம்மத்தையரிந்து எவனெதைஇச்சிக்கிரானோ அவனுக்கதுசித்திக்கின்றன இவ்
வக்ஷரவஸ்துவை அவலம்பிக்கிரதேசிரேஷ்டம் இவ்வாலம்பனத்தை அரிந்தவன் பிரம்மலோக
த்தில் பூஜிக்கப்படுகிறான் புத்திக்குஸாக்ஷியான இவ்வாத்மாமாயைமுதலான விகாரங்களிலிரு
ந்துண்டானவனில்லை நசிக்கிரவனுமில்லை அசுத்தவாக்கு மனதுகளுக்கெட்டாதவன் தேகமடி
படும்போது புராணனான இவ்வாத்மா அடிபடுகிரதில்லை, அடித்தேனென்றெண்ணுகிரவனு மடி
பட்டேனென்றெண்ணுகிரவனுமாத்மாவைஅரியவில்லைபரமார்த்தத்திலடித்தவனடிக்கவுமில்லை
அடிபட்டவ னடிபடவுமில்லை அணுவுக்கணுவும் மகத்துக்குமகத்துமான இவ்வாத்மா பிரா
ணியின் ஹிரதயகுஹயில் வைக்கப்பட்டிருக்கிரான் அகர்தனாகிய அவனை சோகமத்தவனாகவும்
நாலுமுகப்பிரம்மாவின் பிரஸாதத்தால் தன்மகிமையையும் பாற்கிரான் கிரமமுக்திகிடைக்கு



மென்றுகருத்து, சொல்லியஆத்மா பரமார்த்ததெசையில சஞ்சலனாகஇருந்தபோதிலும்வியவ
ஹாரதெசையில் தூரத்தில்போகிரான் வியவஹாரதெசையில் புரீதத்தென்றநாடியில் சயனித்
துக்கொண்டிருந்தபோதிலும் பரமார்த்ததெசையில் ஸர்வவியாபகனாகிரான் இரெண்டுதெசை
யால் ஸூகதுக்கமுள்ளஅந்ததேவனை என்னைப்போலுள்ள பிரம்மவித்துக்களைத்தவிர வேரை
எவனரியுவான் சரீரங்களிலசரீரனாகவு மவஸ்தயத்தஇடங்களிலிருந்து மகானும் விபுவுமாகவு
மிருக்கின்றஆத்மாவை அரிந்ததீரன் சோகிக்கமாட்டான் இவ்வாத்மாவை அதிகவசனங்களா
லடையக்கூடாது ஸூக்ஷ்மபுத்தியாலும் அதிகசிரவணத்தாலு மடையக்கூடாது நிதித்தியாஸனத்
தாலெந்தபரமாத்மாவை இந்தஜீவன்வரிக்கிரானோ அவ்வாத்மா அச்சாதனத்தாலடையத்தக்க
னவன் அல்லது இப்பரமாத்மாதானே நிதித்தியாஸனத்திலாரூடனான எந்தஉத்தமாதிகாரியை
வரிக்கிரானோ அப்புருஷனால் தானிந்தபரமாத்மா அடையத்தக்கனவன் அந்தபுருஷனுக்கிந்த
ஆத்மா தன்ஸ்வரூபத்தைவரிக்கிரார் அந்தஜீவனை தன்னிடத்தில் லயப்படுத்திக்கொள்ளுகிரா
னென்றகருத்து இவ்வாத்மாவை கெட்டநடத்தைகளில் வைராக்கியமத்தவனும் சாந்தியத்தவ
னும் ஸமாதியத்தவனும் சாந்தியத்தமனதுள்ளவனும் பிரஞ்ஞானத்தாலடயமாட்டான் எவனு
க்கு பிராம்மணன்க்ஷத்ரியனென்ற இரெண்டுமன்னமோ சராசரப்பிரபஞ்சம் முழுமையுமென்
றுகருத்து எவனுக்கு ஸகலப்பிரபஞ்சபக்ஷகனாகிய மிருத்யுவு மன்னத்தை நனைக்கிரநெய்யா
வானோ அந்தஸகுணேசுவரனு மெதிலிருக்கிராரோ அந்தநிற்குணாத்மாவை இப்படிப்பட்டவ
னென்றெவனரியுவான் புண்ணியலோகத்தில் கர்மபலத்தை அனுபவிக்கிரவர்களும் இரதயகு
ஹயில் பிரவேசித்தவர்களும் நிழல்வெய்யில்கள்போலுள்ளவர்களுமாக இருக்கின்ற ஜீவாத்ம
ப்பிரத்யகாத்மாக்களையாவது பிரத்யகாத்மபரமாத்மாக்களையாவது ஐந்தக்னியுள்ள பிரம்மவி
த்துக்கள்சொல்லுகிரார்கள் எதுகர்மிகளுக்கணைபோலிருக்கின்றனவோ நாசமத்ததும்ஸம்ஸா
ரக்கரையோ இச்சையுள்ளவர்களுக்கு பயத்தைத்தீர்கிரதுமான அந்தப்பிர்ம்மத்தை அரியுகிரத
ற்கும்நாசிகேத அக்னியை அனுஷ்டிக்கவும்நாம்சக்தியுள்ளவர்களாயிருக்கிரோம பிரத்யகாத்மா
வை ரதியாகவும் சரீரத்தைரதமாகவும் மனதைக்கடிவாளமாகவும் இந்திரியக்களைக் குதிரைக
ளாகவும் சப்தாதிவிஷயங்களைதேரோடும் வீதியாகவும் ஆத்மாஇந்திரியம்மனதுகளுடன் கூடி
னவனை புஜிக்கிறவனென்றும் புத்திமான்கள்சொல்லுகிரார்கள் எவன்பிர்ம்மத்தில் யோகமத்த
மனதால்விஞ்ஞானமத்திருக்கிரானோ அவனுடைய இந்திரியங்கள் கள்ளக்குதிரைகள்போல்வச
ப்படாதுகள் எவன்பிர்ம்மத்தில்யோகமுள்ளமனதால் விஞ்ஞானமுள்ளவனோ அவனுடைய
இந்திரியங்கள் நல்லகுதிரைகள்போல் வசப்பட்டிருக்கும் எவன்கெட்டமனதுள்ளவனுமெப்
பொழுதுமசுசியுள்ளவனுமாக இருக்கின்றானோ. அவனந்தபரமபதத்தை அடையமாட்டான்
ஸம்ஸாரத்தையுமடையுவான் எவன்நல்லமனதுள்ளவனுமெப்பொழுதும் சுசியுள்ளவனுமாக
இருக்கின்றானோ அவனந்தபதத்தை அடைகிரான் திரும்பவும்ஜனிக்கிறதில்லை விஞ்ஞானமெ
ன்றபுத்தியைஸாரதியாகவும் மனதைக்கடிவாளமாகவும் செய்துகொண்ட நான்ஸம்ஸாரமார்
கத்தின்கரையாகியவிஷ்ணுபதத்தை அடையுகிரான் இந்திரியகோளகங்களைக்காட்டிலுமதுகளி
ன்விர்திகளாகியசப்தாதிவிஷயங்கள்பெரிதுகள் அந்தஅர்தங்களைக்காட்டிலுமவ்வியக்கமென்ற
அவித்தைபெரிது அதைக்காட்டிலும் பரமபுருஷனென்றபரமாத்மா பெரியவன் அந்தபுருஷ
னைக்காட்டிலும்பெரிதொன்றுமில்லை அதேமுடிவாயும்ஸர்வாதாரமாயுமுள்ளது இப்பரமாத்
மாஸகலபூதங்களிலுமிரஹஸ்யமாக இருந்துபிரகாசியாமலிருக்கிரான் ஸூக்ஷ்மத்தைப்பார்க்க
வல்லமையுள்ளவர்களால சஞ்சலஸூக்ஷ்மபுத்தியால் பார்க்கப்படுகிரான் பிராஞ்ஞன்ஸூக்ஷ்
மபுத்தியுள்ளவன் அந்தபரமாத்மாவை நன்றாகப்பார்க்கிறதற்காக வாக்கைமனதில்தகயுவான்
அப்படியேமனதை விஞ்ஞானத்மாவிடத்தில் தகயுவான் அந்தஞானாத்மாவைமகாத்மாவிடத்தி
ல்தகயுவான் அந்தமகத்தைசாந்தாத்மாவிடத்தில் தகயுவான் ஆகையால் ஓய்ஜனங்களே அனு

தியான அவித்யாஸுஷுப்தியிலிருக்கின்ற நீங்களெழுந்திருங்கள் கூடஸ்தாத்மதெர்சனமாகிற
ஜக்கிரத்தைஅடையுங்கள் மகாவரக்கியார்தசிரவணம் செய்கிறதற்காகபெரியோர்களைசரண
மடையுங்கள். அவர்களுடைய உபதேசத்தால்பரமாத்மாவை அரியுங்கள் அந்தமார்க்கமானது
கத்திமுனைபோல்நாடக்கூடாததென்று பெரியோர்கள்சொல்லுகிறார்கள் சப்தஸ்பரிசரூபரஸ
கெந்தங்களத்த அந்தபரமாத்மாவை ஆதியந்தமத்ததும் பெரிதுக்கும்பெரிதுமாகபாவித்துமிர்
த்யுமுகத்திலிருந்துவிடுபடுகிறான் யமதர்மாராஜனால்நசிகேதனுக்குச்சொல்லப்பட்ட இவ்வுபாக்
கியானத்தைச்சொன்னவனும் கேட்டவனும்பிர்ம்மலோகத்தில்மகிமையை அடையுகிறான்.
இந்தரகஸ்யத்தை பிராம்மணஸபயில் மரணகாலங்களிலும் சிராத்தகாலங்களிலுமெவன்சிரவ
ணம்செய்விக்கிறானோ அவனுக்கது மோக்ஷார்தமாகின்றனஜீவனாதிகாலம்முதலிந்திரியங்களை
விஷயங்களாவிரொக்ஷிக்கிறபடியால் புத்திராளைப்போலபிமானத்துடனதுகளைத்தானேபாற்கிரா
ன்பிரத்யகாத்மாவைப்பார்கிறானில்லை, எவன்தீரனாகிஇந்திரியங்களை திருப்பிமோக்ஷத்திலிச்சை
யுள்ளவனோ அவனேபார்கிறான் எவர்க்ள்வெளிப்பட்டகாமங்களை அனுஸரிக்கிறார்களோஅந்த
அவிவேகிகள்விஸ்தாரமானயமபாசத்தை அடையுகிறார்கள் ஆகையால்தீரர்களானவிவேகிகள்
மோக்ஷத்தைநிச்சயமாக அரிந்தனித்தியங்களை இவ்விடத்தில் பிரார்த்திக்கிறார்களில்லை சப்த
ஸ்பர்சரூபரஸ கெந்தங்களை எதனாலரியுகிறானோ இப்பிரத்தியகாத்மாவைத்தவிர வேறாளது
ஸமாதிகாலத்தில் மிச்சமாயிருக்கின்றன ஸ்வப்னஸுஷுப்திகளை எவனால்பார்க்கிறானோஅந்த
ஆத்மாவைவிபுவாக அரிந்தவன் சோகப்படுகிறதில்லை ஜீவனுக்குதன் ஸமீபத்திலிடங்கொடு
த்த இப்பிரத்தியகாத்மாவைஸகலத்துக்கும்பதியாக அரிந்தவன் தூரவுமார்க்கத்தில் விரஸப்
படமாட்டான் எவன் ஜலத்தின்னுத்பத்திக்குமுன் பிரம்மத்தி னிடத்திலிருந்துண்டாகி ஜீவ
னுடன்கூடவே இரதயகுஹயி லிருக்கிறானோ இப்பிரத்தியாகாத்மாவே பிர்ம்மம் அதிதிஎன்
றும்தேவதைஎன்றும் சொல்லப்படுகிற எந்த ஆத்மாபிராணனுடன்கூடகுஹயிலிருக்கிறானோ
அரணிகளிருக்கின்றஅக்னிபோலவும் கெர்பிணிகளால்தரிக்கப்பட்டகெர்பம்போலவும் தினம்
தோரும்பிராம்மணர்களால் ஸ்துதிக்கப்பட்ட ஸூரியன்போலவும் கர்மிகளால் ஸ்துதிக்கப்
பட்ட அக்கினிபோலவுமிருக்கின்ற இந்த ஆத்மாவேபிர்ம்மம். எதில்ஸூரியனுண்டாகிலயி
க்கிராரோ தேவர்களனவருமெதிலர்பிக்கப்பகிறார்களோ அந்த ஆத்மாவை எவன்கடரு
வான் சைதன்னியரூபியான இப்பிரத்தியகாத்மாவேஸர்வகெத பிர்ம்மம் அதற்கு மேலில்லை,
எந்த ஆத்மா ஜீவனிடத்தில் ஸாக்ஷியாகவும் பரிச்சின்னனாகவு மிருக்கிறானோ. அவனீசுவர
னிடத்தில் ஸாக்ஷியாகவும் அபரிச்சின்னனாகவுமிருக்கிறான் எது அந்த அபரிச்சின்ன பிரம்
மத்தினிடத்தில் ஸாக்ஷியாகவும் நிஷ்பிரதியோகிகமாகவு மிருக்கின்றனவோ. அந்த அரூப
வஸ்து இந்தபரிச்சின்னப் பிரத்தியகாத்மாவுக்கு பிராரப்தம்முடிந்த காலத்தில் ஸித்திக்கி
ன்றன. எவன்நாநாவைப்போல்பாற்கிறானோ அவன்பிரத்யக்பிர்ம்மைக்கியத்தைப்பார்த்தவ
னாகையால்மரணத்துக்கு மரணமானமோக்ஷத்தை அடைகிறான் இந்த அபேதமானது மனது
னாலேயே அடையத்தக்கது. இவ்வபேதத்தை அடைந்தவனிடத்திலெவ்வளவும் பேதமில்லை
அங்குஷ்ட ஆகாரமுள்ளபுருஷன் தேகமத்தியிலிருக்கிறான் ஸகலாதிபதியான அவனைஅரிந்தவ
ன் தூரவுமார்கத்தில் விரஸப்படமாட்டான் அந்தஅங்குஷ்டபுருஷன்புகைஅத்த அக்னிபோல்
ஜுவலிக்குரான் அவனேஸகலத்துக்குமீசன் இன்றைக்கும் நாளைக்குமவன்தானிருக்குரான் எ
ப்படிமலைகளில்மேகங்களால்விடப்பட்டஜலம்பள்ளப்பிரதேசத்தில்பிரவேசிக்கின்றனவோ அ
ப்படிகர்த்ருத்துவாதி ஸம்ஸார தர்ம்மங்களை பரமாத்மா வைத்தவிரவேறாயாகப பார்தபேத
தெர்சியானவன் மரித்தபின்னந்ததர்ம்மங்களைத்தானடையுவான் பிர்மாத்மைக்கியதெர்சியான
வன் சுத்தஜலத்தில்விடப்பட்ட சுத்தஜலம்போல் பிரம்மத்திலைக்கியத்தை அடையுவான் பிரஸி
த்தங்களான ஒன்பதுதுவாரங்கள்நாபிநடுத்தலை இந்தப்பதினொருதுவாரமுள்ளதேகமாகிற ஒரு



பட்டணம் சுத்தசைதன்னியமான ஜன்மமத்தபரமாத்மாவின் ஞானனுஷ்டானத்தால் ஜீவன்
சோகிக்கிறானில்லை, ஜீவன்முக்தனாகியும் விதேகமுக்தனாகிறான் ஹம்ஸனென்றபரமாத்மா
ஸூரியன் வாயு அந்தரிக்ஷமக்னிவேதி பிரதிவி அதிதி கலசம் மனுஷ்யர்கள் தேவர்கள் இதுக
ளிலும் ஸத்தியம் ஆகாசம் ஜலங்கள் யஞ்ஞங்கள் பர்வதங்களிதுகளிலுண்டானதுகளும்
ஸத்தியமானப்பிரம்மமென்றிப்படியும் யமனால்சொல்லப்பட்டுது பிராணனை உயரக்கிளப்புகிர
வனாகியும் அபானனைகீழே தள்ளுகிரவனாகியும் மத்தியிலிருக்கிரவனாகியும் பஜிக்கத்தக்கனவ
னாகியுமிருக்கின்ற பிரத்தியகாத்மாவை கண்முதலான ஸகலஇந்திரியதேவதைகளு முபாஸி
க்கிறதுகள், சரீரத்திலிருந்தும் சரீரஸம்பந்தமத்து தேகத்தியாகம்செய்த தேகிக்கு தேகத்தி
லென்னமீதிஇருக்கின்றன பிராணாதியொன்றும் மீதிஇருக்கமாட்டா ஒருமனுஷ்யனும்பிராண
பானங்களால் ஜீவிக்கிறானில்லைஎவனிடத்திலிந்தபிராணபானங்களாச்சிரயித்திருக்குதுகளோ
அந்தஅன்னியனாலேயே ஸகலஜீவர்களும் ஜீவிக்கிறார்கள், ஓய்களதமபுத்திரரே இப்பொழுது
ரஹஸ்யமாயும் ஸனாதனமாயுமுள்ள இந்தஅபரோக்ஷப்பிரம்மத்தை உமக்குச்சொல்லுகிறேன்
எப்படி மரணத்தைஅடைந்து பின்ஜன்மமில்லாமலாவானோ அப்படிபிரம்மத்தை அரியுவீர்
மைத்தவர்கள்யோனியை அடையுவார்கள் சிலர்கள் ஸ்தாவரரூபத்தை அடையிகிறார்கள் சுரு
தியில்சொல்லியபடி பூர்வகர்மானுஸாரமாக சரீரத்தைஎடுக்கிறார்கள்பிராணாதிகளெல்லா முரா
ங்கும்பொழுது நிர்விகல்பஸமாகிகாலத்தி லானந்தத்தை மிகவுமுண்டுபண்ணுகிர இந்தபரம
புருஷனாகிய பரமாத்மா முழித்துக்கொண்டிருக்கிறான் அந்தவஸ்துவே சுக்கிரன்போ லொளி
வுள்ளது அதேப்பிரம்மம் அதேஅமிருதமென்று சொவ்லப்படுகின்றன அதனிடத்தில் ஸகல
உலகங்களுமடுத்திருக்குதுகள் அதைஅதிக்கிரமிக்கிரவ னொருவனுமில்லை இந்தபிரத்தியகாத்
மாவே பிரம்மமென்றுசொல்லப்படுகின்றன எப்படி ஒன்றான அக்கினியானது புவனத்தில்பிர
வேசித்து ஸகலரூபத்திலுமிருக்கின்றனவோ அப்படிஸர்வபூதாந்தராத்மாவு மொருவனே ஸர்
வபூதத்திலுமிருக்கிறான் வாயுவும்ஸூரியனும்போலவும் சுகதுக்கஸம்பந்தமத்தவன் ஒருவனே
அனேகரூபியாயிருக்கிறான் அவனை எவர்கள்தெர்சனம்செய்கிறார்களோ அவர்களுக்கே சாசு
வதமானஸுகம் நித்தியங்களுக்குநித்தியனாகவும் சேதனங்களுக்குசேதனனாகவும் அனேகங்க
ளுக்கொருவனாகவுமிருக்கிர எவன் ஸகலஇச்சைகளையும் பூர்த்திசெய்கிறானோ தேகத்திலிருக்
கின்ற அவனைதெர்சித்தவர்களுக்கே சாசுவதமானசாந்தி உண்டாகின்றன இதென்று கண்முன்
னிருக்கிறதாக நிர்தேசிக்கக்கூடாத ஸர்வோத்கிருஷ்டானந்தப்பிரம்மத்தை அபரோக்ஷமாகவித்
துவான்களரியுகிறார்கள் அதை நானெப்படிஅரியுவேனெனில் வியவஹாரதெசையி லுபதேசத்
தாலதுவிளங்குகிரது பரமார்த்ததெசையாகிர ஸமாதிகாலத்தில் விசேஷமாகவிளங்குகிரது
பரஞ்சோதிஸ்வரூபியான அந்தப்ரம்மாவிடத்தில் ஸூரியன்சந்திரன் நக்ஷத்ரங்கள் மின்னல்க
ளும் விளங்குகிரதில்லை அப்படிஇருக்க ஜலத்தாலனைந்துபோகிர அக்னிக்குக் கேழ்க்கவேண்டிய
தில்லையே அப்பரமாத்மாவிளங்கும்போது பின்விளங்குகின்ற ஸூரியாதிகளெல்லா மந்தபர
மாவின்காந்தியால் விளங்குகிரதுகள் இப்படி அப்பயதீக்ஷிதரவர்களால் மொழிபெயர்க்கப்ப
ட்ட குருஞ்ஞானவாஸிஷ்ட தத்துவஸாராயணசந்திரிகையில் ஞானகாண்டத்தின் க-வதுபாதத்
தில் அ - வது அத்தியாயம்முற்றிற்று.

## கூ-வது அத்தியாயம்.

பிரம்மா ஸ்வாமி அந்தயமன் நசிகேதனுக்கு பின்னெதை உபதேசித்தாரோ அதை
எல்லாமெனக்கு வியக்தமாகச்சொல்லவேணும் ஸ்ரீகுருமூர்த்தி ஓய்பிரம்மாவே என்னுடைய
அம்சனாகியயமன் ஸகலசிக்ஷகனாகஇருந்தும் பரமதயாளுவாயும் ஸர்வஞ்ஞராயுமிருப்பதால்

திரும்பவும் நசிகேதனுக்குச்சொல்லியதென்னவெனில் கேளும் "யமன்" இந்தபிரத்தியகாத்மா வாகிய அரசுமரம் பரமாத்மாவாகிற மேல்வேருடையதாகவும் ஜீவாத்மாவாகிற கீழ்கொப்பு க்களுடையதாகவும் ஸனாதனமாகவுமிருக்கிறது அதேசுக்ரஜ்யோதிப்பிரம்மம்அமிர்தமென்றும் சொல்லப்படுகின்றன அதினிடத்தில் ஸகலஉலகங்களு மாச்சிரயித்திருக்கிறதுகளென்று முன் னும்சொன்னோம் பிரமாத்மைக்கியமே ஸகலவேதாந்தங்களுக்கும் முக்கியஅபிமதமாகையா லந்தஐக்கியத்தையே முமுக்ஷுக்களரியவேண்டியது இவ்வுலகமெல்லாம் பரமாத்மாவிடத்தி லேயே நடுங்குகிறது அவ்விடத்திலிருந்தே வெளியில்வந்து ஸஞ்சரிக்கிறது அந்தப்பிரம்மமே கர்மிகளுக்குப்பெரியபயம் உபாஸகர்களுக்குப்பயத்தைச்செயகின்றன ஸம்யக்ஞானிகளுக்கப யத்தைச்செய்கின்றன பூர்ணஞ்ஞானிகளுக்கபயமாகவே இருக்கின்றன எப்படிவஜ்ரபாணியான இந்திரனைக்கண்டு பர்வதங்கள்பயப்படுங்களோ அப்படிஸகலரும் பயப்படுகிறார்கள் இப்படிப் பட்டபிரம்மத்தை எவர்களரியிகிறார்களோ அவர்க ளமிருதர்களாகிறார்கள் இப்பரமாத்மா வைத்தொட்டு பயத்தாலக்னிஸூரியர்கள் தபிக்கிறார்க ளிந்திரனும்வாயுவும் அவரவரதிகார ங்களைச்செய்கிறார்கள்ஐந்தாவதுவனான மிர்த்தியுவுமோடுகிறான் "பிரம்மா" அய்யாகுருநாதரே தயாஸமுத்திரரே இதிலொருஸம்சயமுண்டாயிருக்கின்றன அதைத்தீர்த்தபின் மைத்ததைச் சொல்லவேணுமென்று யாசிக்கிறேன் அத்தியாத்மவித்தையைக்குரித்து யமனுலாரம்பிவிக்கப் பட்டிருக்க அதிலக்னிமுதலான அதிதைவதங்களுக்கேது பிரஸக்தி காரியங்களுக்குகாரணத் தைத்தொட்டுபயம்கூடும் மைத்ததைத்தொட்டுக்கூடாது ஆத்யாத்மிகங்களான காரியங்களுக் கு நிர்குணப்பிரம்மமே காரணம் ஆதிதைவிகங்களான காரியங்களுக்கு ஸகுணப்பிரம்மம் காரணமென்று பிரஸித்தமே இதுக்குவிரோதம் வருகின்றனவே என்று பிரம்மாவால் கேழ் க்கப்பட்ட கருணாநிதியான குருமூர்த்தியானவர் சிஷ்யனுடைய ஸகலஸந்தேகத்தையும் சேதி க்கிறதில்நிச்சயத்துடன்சொல்லுகிறார் "ஸ்ரீகுருமூர்த்தி" இரெண்டுவிதகாரியங்களுக்குமிரெண்டு விதபிர்ம்மமாகபரிணமித்ததில்ஸந்தேகமில்லை ஆகிலும்நிர்குணப்பிர்மமே ஸகுணப் பிர்ம்மாகப ரிணமித்துதென்றுசுருதியில் சொல்லப்பட்டிருப்பதாலந்த பரமகாரணமான நிர்குணப்பிர் ம்மத்தைத்தொட்டு ஸகலவிகாரங்களுக்கும் பயமுண்டு அதிதைவதங்களுக்கு மாத்திரம்ஸகு ணப்பிர்ம்மத்தைத்தொட்டும் பயமுண்டு ஸகுணத்தின் பிரஸக்தியானது அனுவாதோபயுக்தம் ஸ்தூலாருந்திகாநியாயத்தால் லக்ஷணார்தமென்றரியத்தக்கது நிர்குணஞ்ஞானம் ஸித்திக்கவே ண்டியநிமித்தம் ஸகுணத்தின்னனுவாதமத்யாவச்சியகமாகையால் யமன் சொன்னதுயுக்தந் தான் ஓய்தாமரப்பூவிலுண்டானவரே திரும்பவும்யமனுலே நசிகேதனுக்கென்னசொல்லப்பட் டுதென்றுநீரென்னைக்கேளும்சொல்லுகிறேன் "யமன்" இந்தசரீரமிருக்கும் பொழுதேஎவன்பர மாத்மாவை அரியவல்லமையத்துப்போனானோ அவன்ஸகல உலகங்களிலும் சரீரத்தைஎடுப்பா ன்கண்ணாடியில்முகத்தைப்போல் ஸ்பஷ்டமாக தேகத்தில்பரமாத்மாவைநிதித்தியாஸனத்தால் நன்றாக அரியுவான் ஸ்வப்பனத்தில் நாநாவிதமாகபிதிருலோகத்திலாத்மாவை ஜலத்தில்போ லவ்வியக்தமாக கெந்தர்வலோகத்திலுமரியுவான் நிழல்வெய்யில்களைப்போல் பிர்ம்மலோகத் திலாத்மாவைவியக்தாவியக்தமாக அரியுவான் இந்திரியங்கள்வேராயாக இருப்பதையுமுதயா ஸ்தமயத்தையுமரிந்ததீரபுருஷன் சோகிக்கமாட்டான் இந்திரியங்களைக்காட்டிலும்மனதுபரம் மனதைக்காட்டிலும் ஸத்வகுணம்பரம்ஸத்வத்தைக்காட்டிலும் மகத்தான ஆத்மாபரன்மஹத் தைக்காட்டிலுமவியக்தம்பரம் அவியக்தத்தைக்காட்டிலும் பரம்புருஷன்பரன் அவன்வியாப கன்அடையாளமத்தவன் அந்தபுருஷனை அரிந்தவன்மோக்ஷாமிருதத்தை அடையுவான், இப்ப ரமாத்மாவின்ரூபம்நேத்திரத்விருக்கவில்லை,இவனை ஒருவனும்கண்ணால்பார்க்கமாட்டான்எவர்க ளிவனைஞானவிஞ்ஞானங்களாலரியிகிறார்களோ அவர்களேஅமிர்தர்களாவார்கள்எப்பொழுது ஞானேந்திரியங்களைந்தும் மனதுடனலையாமலிருக்கின்றதுகளோ புத்தியும் சேஷ்டிக்கவில்லை



யோ அதையேபரகெதிஎன்றுபெரியோர்கள்சொல்லுகிறார்கள்,ஸ்திரமான அவ்விந்திரியதாரணை யைத்தான்யோகமென்றெண்ணுகிறார்கள பரமாதமன்றி அப்பியாஸம் செய்யப்பட்ட இந்த யோகத்தால்போகத்துக்கு நாசமும்மோக்ஷத்துககுதயமுமுண்டாகிறது வாக்குமனதுநேத்தி ரங்களாலிந்தப்பரமாத்மாவை கிரகிக்கமுடியாது தன்னைத்தவிரமத்த இடததிலிருக்கிறதாகச் சொல்லுகின்றபேதவாதிக்கு அதெப்படி அடையப்படும் ஜீவனீசுவரனிரெண்டுபேர்களிடத்தி லும்தத்துவமாக இருக்கிறானென்றரியவேண்டியது அப்படிஅரிந்தவனுக்கேதத்துவம் பிரஸ ன்னமாகும். எப்பொழுதிந்தஜீவனுடைய இரதயத்திலிருக்கும்காமங்கள்நசிக்குமோ அப்பொ ழுத மிருதனுவான் ஜீவன்முக்தனுமாவான் எப்பொழுது ஹிரதயக்கிரந்திபேதப் வந்துதோ. அப்பொழுதமிருதனுவானென்றிப்படி வேதத்தின்னனுசாஸனம் நூத்தொருநாடிகள்தேகத்தி லிருக்குதுகள் அதுகளிலொருநாடிசிரஸ்வரை வியாபித்திருக்கின்றன அதுவழியாகமேலே போகிறஜீவன் அமிருதத்துவத்தை அடையுகிறான் மைத்தநாடிகள்வழியாகப்போகிறவர்களு க்குதிரும்பவும்ஜன்மங்களேகிடைக்கும் கட்டவிரல்பிரமாணமுள்ள அந்தராத்மாவானபுருஷ ன்ஜனங்களுடைய இரதயத்தில்ஸர்வதா இருக்கிறான் அவனைதன்சரீரத்திலிருந்து முஞ்சச்சடி யிலிருந்துதிருணத்தைப்போல்மேலெடுக்கவேணும் சுக்கிரஜ்யோதியும்அமிருதனுமான அவனை அரியுவான் யமனால்சொல்லப்பட்ட இந்தபிர்ம்மவித்தையை நசிகேதனடைந்து ஸகலயோக விதியையும்பிர்ம்மத்தையுமடைந்து இரஜோகுணமத்தவனானான் இப்படிஅரிந்த அன்னியனும அத்யாத்மவித்தையை அடையுவான், ஸ்ரீகுருமூர்த்தி ஓய்பிர்ம்மாவே வைராக்கியஞ்ஞானஸாதன மும்சுருதியில்சொல்லப்பட்டதுமான இந்நசிகேதோபாக்கியானத்தை நீரெப்பொழுதுமாத ரவுடன்மனனம்செய்யும் ஓய்பெரியபுத்தியுள்ளவரே இந்தகடவல்லி உபனிஷத்தின்னர்தத்தை உம்முடையஸகலசிஷ்யர்களுக்கும் மோக்ஷார்தமாக எனனுஞ்ஞையால்நீருபதேசியும் இப்படி குருவால் சொல்லப்பட்டபிர்ம்மாவானவர் திரும்பவும்ஸம்சயத்துடன் ஸர்வலோகேசுவர ரானதெக்ஷிணாமூர்த்தியைகேழ்கிறார் "பிர்ம்மா" ஸ்வாமிசரீரமிருக்கும்போதே பரப்பிர்ம்மத்தை அடையுகிறானென்றுசொன்னதிலெனக்கு ஸந்தேகப்படுகின்றன பின்னடையுகிறோனென்றசு ருதிவசனத்தால்தேகம்விழுந்த பின்னல்லவாபரப்பிர்ம்மப்பிராப்திகாணுகின்றன உத்தமாதி காரிக்கும் தேகமிருக்கும்பொழுது பிர்ம்மஞ்ஞானமுண்டாகுமேதவிர அதின்னடைவுஸித்தி யாது இதாசுருதிக்குவிரோதமன்றி தாங்கள்சொல்லவேண்டியதல்லவா இப்படிபிர்ம்மாவால கேழ்கப்பட்டவரும பிர்ம்மானந்தஸமுத்திரரும் ஜகன்குருமான ஈசுவரன் உத்தரம்சொன் னார் ஸ்ரீகுருமூர்த்தி ஓய்பிர்ம்மாவே யமவசனங்களொருசுருதிக்கும விரோதப்பட்டதுகளல்ல அதெப்படிஎனில்சொல்லுகிறேன்கேளும் பிர்ம்மம்ஸகுணம் நிர்குணமதீதமென்று மூன்றுவித மல்லவா அதில்நடுவான நிர்குணமானதுதேகமிருக்கும்பொழுதே அடையத்தக்கது அகண் டைகரஸாகாரமான அந்தநிர்குணப்பிர்மத்தைக்காட்டிலும் அதீதமானபிர்ம்மம்தான் பிராரப்த தேகம்விழுந்தபின்னடையத்தக்கதென்று வேதாந்தநிர்ணயம்நிர்குணத்தை அடைந்தஜீவன்முக் தன்ஸாதனாபேக்ஷையன்றி அந்தநிர்குணாதீதத்தை பிராரப்தம்க்ஷயித்தபின்னடையுகிறான் ஸர் வபூதங்களும்க்ஷராங்கள் கூடஸ்தனக்ஷரன் அன்னியனான உத்தமபுருஷன்பரமாத்மாவென்றஸ் மிருதியால் மூன்றுவிதமாகச்சொல்லப்பட்டபடியால் குற்றமில்லை புஜிக்கிறவன் புஜிப்பிக்கிற வன் புஜிக்கத்தக்கனவஸ்துக்களிந்தமூன்றும் பிர்ம்மமென்றும்சுருதியில் சொல்லப்பட்டிருக் கின்றன ஆகையால்பிரம்மம்மூன்றுவிதமென்பதில் ஸந்தேகமேஇல்லை பிர்ம்மா காரியத்தில் பேதங்கண்டிருப்பதாலதற்குவிலக்ஷணமாக இருக்கவேண்டியநிமித்தம்காரணத்திலபேதம்தா னிருக்கவேணும் மூன்றுவிதமென்றபேதங்கூடாது ஆதியந்தமத்த ஏகோகாரணவஸ்துவானது காரியப்பிரபஞ்சஸிருஷ்டிமுதலானதுக்காக அனேகத்துவத்தை ஆச்சிரயித்திருப்பதால் காரண வஸ்துவே அனேகமென்சொல்லக்கூடாது எப்படிவிரூபியான ஏகோஸ்வர்ணமகுண்டலாதி

யனேககாரியரூபங்களாயித்தோ எப்படிஒரேஜலமானது உபாதிபேதத்தாலலைநுரைமுதலான
அனேககாரியங்களாயித்தோ எப்படிஒரேமண்ணனதுகுடம்சுவர்முதலான அனேகமாயித்தோ
இப்படி அனேகதிருஷ்டாந்தங்களால் காரியமனேகமாயிருந்தபோதிலும் காரணமொன்றாகவே
தெரியவருகின்றன ஆகையால்வாஸ்தவமாககாரணம் பிர்ம்மமொன்றேவியவகாரத்துககா இரெ
ண்டுமூன்றுஅனேகமுமாகும் உபாதியாலுண்டானவியர்வகாரிகபேதத்தால பாரமார்திகவஸ்து
விடத்திலும்பேதம்சொல்லக்கூடாது மனதாலேயே இந்தப்பிர்ம்மத்தை ஜீவனடையுகிறான்
இதில்நாநாவிதபேதமொன்றுமில்லை அத்துவைதமான பிர்ம்மத்தைத்தவிரவேனா ஒன்றும்பா
மாரதசெதசையிலில்லை நிர்விசேஷப்பிர்ம்மத்தில் அல்பமாவதுபேதத்தைச்செய்கிரவன் பெரிய
பயத்தை அடையுகிறான் அபேதத்தாலேயே அபயமுண்டாகின்றன இப்படி அனேகசுருதிக
ளால்ஸத்தியமான மோக்ஷாவஸ்தயில்தர்ம்மம் அத்வைதமென்ற அரியப்படுகிரபடியால் அத்து
வைதவாதத்தைசித்தாந்தமாகவும் பேதவாதத்தை பூர்வபக்ஷமாகவுமெண்ணுகிரேன் இப்பட
பிர்ம்மாவின்வசனத்தைக்கேட்டு குருமூர்தியானவர் பிர்ம்மாவுக்கு பிராந்தியுண்டாயிருக்கு
தென்றெண்ணி சிருப்புடன் சொன்னர் ஸ்ரீகுருமூர்தி ஓய்பிர்ம்மாவே இதுவரையுமும்மைது
வைதாத்துவைதாதிபிராந்திவிடவில்லையா ஸகலஸம்சயநிவர்தகமானஎன்வசனத்தைக்கேளும
பிர்ம்மத்தில் அத்வைதவசனமானது ஸாமான்னியமாகையால் பூர்வபக்ஷமாகும் இரெண் மூ
ன்றுமுதலானவசனம் விசேஷமாகையால் ஸித்தாந்தமாகும் பஞ்சீகிருதப்பிரபஞ்சத்துக்குகா
தாஸகுணேசுவரனுகையால் ஜீவன்புஜிக்கிரவனென்றும் ஜகமபுஜிக்கத்தக்கனதென்றுபபேத
ங்கூடும் அபஞ்சிகிருதஜீவனுக்கு நிர்குணப்பிர்ம்மமேகர்தாவாகும் ஜீவன்ஸகுணேசுவரகாரிய
மாகில்கைவல்லியத்துக்குத்தடைஉண்டு நிர்குணப்பிர்ம்மத்தைத்தவிர்மைத்தநிலிருந்து ஜீவனு
க்குத்பத்தி அஸம்பவமாகையாலதினிடத்திலேயே பிரளயமானது கைவல்லியமோக்ஷமாகும்
ஜீவனுவிசுவன்தைஜஸன்பிராஞ்ஞனென்று மூன்றுவிதமாக முன்னேசொன்னேனே, அந்த
மூன்றுஜீவனும் லயப்படவேண்டியதற்குலயஸ்தானமான பிர்ம்மமும்மூன்றுவிதமாக அவச்சி
யமாகவேணுமே எப்படிவசனம்ஆகாமம்கெமனம்என்று மூன்றுகர்ம்மங்களொருகரணத்தால
செய்யமுடியாதோ அப்படி ஒருபிர்ம்மத்தால்மூன்றுஜீவலயமாசமாட்டா, மூன்றுபாதங்களைச்
சொல்லியசுருதியால் பிர்ம்மம்மூன்றுவிதமென்றுஸ்பஷ்டம் இப்படியாகும்பொழுது பிர்ம்ம
மைந்துவிதமென்றும் நன்ருகச்சொல்லாம் விரோதமில்லாத அதிகவிசேங்களன்னி ஸ்தலத்
தில்சொல்லப்பட்டிருந்தாலதை எடுத்துக்கொள்ளலாமென்றது ஸகலஸம்மதம் ஸ்வரணம்ம
ண்ஜலம்முதலான நீர்சொல்லியதிருஷ்டாந்தங்களுக்கு நான்சொல்லுகிரேன்கேளும்ஸ்தூலபுத்
தியைஅனுஸரித்துபரோக்ஷஞ்ஞானம் ஸித்திக்கவேண்டியதற்காக அந்தகாரணாத்துவைதவாத
ம்ஸித்தாந்தமாயிருக்கட்டும் ஸூக்ஷ்மபுத்தியை அனுஸரித்துதன்னபரோக்ஷஞ்ஞானம்ஸித்திக்க
வேண்டிதற்காக இந்தகாரணதுவைதவாதம்ஸித்தாந்தமாக சொல்லப்படுகின்றன இதிலும்திரு
ஷ்டாந்தங்களைசசொல்லுகிரேன், எப்படிமுன் ஸ்வரணப்பொடிகள் வெகுக்கள்கூடிஒருஸவா
ணமாயித்தோ எப்படி ஜலபிந்துக்கள்வெகுக்கள்கூடி ஒருஜலமாயித்தோ எப்படிஅணுக்கள்வெ
குக்கள்கூடிமண்ணுயித்தோ இப்படிகாரணமனேகமென்றும் காரிமேகமென்றும்யுக்திப்பிரஸி
த்தமான அர்த்தத்தைநீர்மரக்கக்கூடாது ஸ்தூலப்பிரபஞ்சநாநாத்துவத்தை எவன்ஸத்தியமாக
மனதில்தரிககிராமே அவன்மரணத்தின்மேல் மரணத்தை அடையுவானிதில் சந்தேகமில்லை,
ஸூக்ஷ்மத்துக்கும் ஸூக்ஷ்மதரமான பிர்ம்மநாநாத்துவத்தைதரிக்கிரவன்மரணத்துக்குமரண
மானபரப்பிரம்மத்தை அடையுகிறானிதிலும் ஸந்தேகமில்லை, எவன்தனக்கும்பிர்ம்மத்துக்கும்
அல்பமாவதுபேதத்தைப்பார்ப்பானே அவனுக்குப்பெரிதானபயமும் சோகமோகாதியுமுண்
டாகும எவன்பிர்ம்மத்தின்ஸ்வகெதபேதத்தால் அனேகத்துவத்தைச்சொல்லுவானே அவன்
பயத்தையும் பிரதிஷ்டையையுமடையுவான் ஸ்வகெதபேதஹாணியோவெனில் ஞானிதேகம்



விழுந்தபின்னுரும் அக்காலத்திலுமத்துவைதவார்த்தைக்கெவ்வளவுமிடமில்லை வியவஹரிக்
கிரவன்முதலானதிருபுடிபேதமில்லாத்துனுலும் துவைதாத்துவைதாதிஸகலவியவஹாரமுமத்
தபடியாலுமவ்விடத்தில்வசனிக்கக்கூடாமையாலுமிலக்ஷிக்கக்கூடாமையாலும்மௌனமேகூடும்
இபபடி அப்பையதீக்ஷிதரவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட குருஞ்ஞானவாஸிஷ்டதத்துவஸா
ரயணசந்திரிகையின்ஞானகாண்டத்தில க-வது பாதத்தில் கூ-வது அத்தியாயம் முற்றிற்று"

## ய-வது அத்தியாயம்.

ஓய்விதியே இன்னமும்பிரம்மம் மூன்றுவிதமென்றதை பிரமாணத்துட னுமக்குச்
சொல்லுகிரேன் அதைநீர்கேட்டுநன்ராக மனதில்தரித்துக்கொள்ளும் கேனமென்றஉபனிஷ
த்தில் வியக்தமாகச்சொல்லப்பட்ட பிரம்மபேதததை நீர்கேட்டா லினிஸம்சயமுண்டாகாது
ஓய்பிரம்மாவே ஒருசிஷ்யனவினயத்துடன் குருவிடத்தில் பிரச்சினம்செய்தான் அவன் ஸகல
சிஷ்யலக்ஷண முள்ளவனும்தத்துவத்தைஅரியஇச்சையுள்ளவனுமானவன் "சிஷ்யன்" அய்யாஸத்
குருவே என்சித்தம் எவராலேவப்பட்டு இஷ்டபதார்த்தததில்விழுகிறது முதலாவதான பிரா
ணனுமெவராலேவப்பட்டு அப்படியேவிழுகிரது ஆசாரியர்களிந்தசுருதிவசனத்தை எவரா
லேவப்பட்டுச்சொல்லுகிரார்கள் கண்காதுகளையுமெந்ததேவன் அந்தந்தவிஷயங்களிலேவரா
ன்இப்படிசிஷ்யனுல்கேழ்க்கப்பட்ட குருவானவராதரவுடன்சொன்னர் முன்சித்ரூபியான ஆத்
மாவைகிரமமாக உபன்னியாஸம்செய்கிரார் "குரு" எதுகாதுக்குக்காதோ மனதுக்குமனதோ
வாக்குக்குவாக்கோ பிராணனுக்குபிராணனே கண்ணுக்குகண்ணே அந்தநாசமத்தப்பிரம்மா
த்மாவைஅரிந்து எவர்களதைரியத்துடன்கூடினர்களோ அவர்கள்காதுமுதலான அனுத்மாக்க
ளைவிட்டு பிராரப்தக்ஷயித்தகாலத்திலிந்ததேகத்திலிருந்துகிளம்பி ஸச்சிதானந்ததாதாத்மியத்
தாலமிருதர்களாகிரார்கள் "சிஷ்யன்" அய்யாகுருவேசொல்லியஸச்சிதானந்தலக்ஷணங்களுள்ள
ஆத்மாவை இவ்விடத்தில்தானே நன்ருக அரிந்தவர்களுடைய தேகம்விழுந்தபின் சேஷிக்கின்
றதத்துவத்தினிலக்ஷணத்தை சொல்லவேணும் "குரு" அந்தநிஷ்பிரதியோகிகதத்துவத்தில்கண்
பிரவேசிக்கமாட்டா அரூபமாயும் அதிர்ச்சியமாயுமிருப்பதாலதை நாமரியமாட்டோம் வாக்
கும்மனது மவ்விடத்தில்போகமாட்டாதுகள் சொல்லக்கூடாமலும் சிந்திக்கக்கூடாமலு மிரு
ப்பதாலதை நாம் நன்ருகஅரியவேமாட்டோம் எப்படியுனக்குப் பரோக்ஷமாகவும்அபரோக்ஷ
மாகவும்சொல்லுவோமோ அப்படி நாமரியாமையா லுபதேசிக்கிரோமில்லை, அரியப்பட்ட
ஸமஸ்தஸவிசேஷத்துக்கன்னியமாயும் அரியப்படாத ஸமஸ்தநிர்விசேஷத்துக்கன்னியமாயு
ம்மேல்சொல்லப்பட்டதென்று நமக்குபூர்விகர்கள் சொல்லிஇருப்பதாலந்தநிற்குணதீதத்தை
எப்படிநாமுனக்குபதேசிப்போம் எதையுபதேசத்துக்கர்மமாக முன்சொன்னேமோதிரும்பவு
மதையேசொல்லுகிரோம் ஸாவதானமாகக்கேள் எதுஸகலலவுகிகவாக்காலும் சொல்லக்கூ
டாததோ எதினுலிந்தஸகலலவுகிக வைதிகவாக்கியங்களை வசனிக்கிரார்களோ அதேபரப்பிர
ம்மமென்றரியுவாய் அதையுபதேசிக்கிரோம் தன்னைத்தவிர அன்னியமாக ஸகலராலுமுபாஸி
க்கப்பட்ட இந்தஸகுணப்பிரம்மமுனக்குபதேசிக்கத்தக்கதில்லை, மனதாலெதைமனனம்செய்
யக்கூடாதோ மனதானது எதனுல்மனனம்செய்கின்றனவோ அதையே பிரம்மமென்று நீஅரி
பேதமாக உபாஸிக்கப்படுகின்ற இந்தஸகுணமரியத்தக்கதில்லை கண்களாலெதுபார்க்கத்தக்க
தில்லையோ எதனுல் கண்கள்பார்க்கிரதுகளோ அதேப்பிரம்மம் இந்தஸகுணமில்லை, எதுபிரா
ணனுலடையப்படாததோ பிராணனெதனுலடையப்படுகின்றனவோ அதேபிரம்மம் இந்தஸ
குணமில்லை, ஸர்வவியாபகமான அந்தநிற்குணப்பிரம்மத்தை ஸாளக்கிராமம் சிவலிங்கம்முத
லான பாதீகங்களிலரிந்தேனென்று எண்ணுவாயாகி லப்பொழுது பிரம்மயல்பமாகிவிடும்

ஆகையால் ஸச்சிதானந்தப்பிரம்மம் பரதீகமத்ததென்று மாதாரமத்ததென்றும் முமுக்ஷுக்க
ளாலரியத்தக்கது உன்னாலரியப்பட்ட ஸகுணப்பிரம்மம் தேவர்முதலியவர்களிடத்தில் விசாரி
க்கத்தக்கன நிற்குணப்பிரம்ம மவ்விரெண்டுகளாலும் நீயரியப்பட்டவ னென்றெண்ணுகிரேன்
உன்னாலந்தநிற்குணமரியப்படவில்லை அந்தஸச்சிதானந்தப்பிரமத்தைதன்னைத்தவிர வேரையாக
அரிந்தேனென்று நானெண்ணவில்லை தானுக அரியவில்லையென்று மெண்ணவில்லை எதுநம்மை
எல்லாமரியுமோ அதுஸகலத்தையு மரியமாட்டாவென்று நானெண்ணவில்லை எவனுக்குசைவ
வைஷ்ணவாதிமதமோ அவன் பிரமத்தைஅரியமாட்டான் எவனுக்கதில்லையோ அவனரியுவான்
தன்னைத்தவிரவேரையாகப் பிரம்மத்தையரிந்தவர்களுக்கது அரியப்படாதது அப்படியரியாத
வர்களுக்கரியப்பட்டது பரதிபோதத்தாலரியப்பட்ட மதமமிருதத்துவத்தையடையுப் ஆத்மா
வால் வீரியத்தைஅடையிகிரான் வித்தையால் அமிருதத்தையடையிகிரான் இந்தேதகத்திலே
யேஅரியுவானுகில் பின்ஸத்தியமுண்டு அரியாவிட்டால் மகத்தானநாசந்தான் ஸகலபூதங்களி
லுமாத்மாவைத்தேடி யரிந்ததீரர்க ளிவ்வுலகத்திலிருந்துபோ யமிருதர்களாகிரார்கள் "ஸ்ரீகுரு
மூர்த்தி" இப்படி அச்சிஷ்யன் குருமுகமாகசேட்டு தத்துவநிச்சயத்தால் கிருதார்த்தனானன்
அப்படி நீருந்நிச்சயிக்கவேண்டியது "பிரம்மா" ஸ்வாமி எகமானஸப்பிரதியோகிகப் பிரம்மாத்
மாவைஅரிந்தவன் தேகம்விழுந்தகாலத்தி லெப்படிநிஷ்ப்ரதியோகிகத்தை அடையிகிரான் அரி
யத்தக்கனதே அடையத்தக்கதேயல்லாமல் அரியத்தக்கதைத்தவிர அடையத்தக்கதுவேரா இ
ல்லைஎன்றெனக்குத்தோற்றுகின்றன எவனெப்படி உபாஸிக்கிரானே அப்படியேஆகிரதென்ற
சுருதியாலுபாஸிக்கத்தக்கனவஸ்துவைத்தவிர அடையத்தக்கதுவேரில்லை என்றரியப்படுகின்
றனவே எந்தஎந்தரூபத்தைநினைத்துக்கொண்டு தேகத்தியாகம்செய்வானே அந்தந்தரூபமே
ஸித்திக்குமென்றஸ்மிருதிவசனத்தாலும் அன்னியப்பிராப்தி யரியப்படவில்லையே ஆகையால்
ஸ்வரூபத்தையரிந்தவனுக்கு அந்தஅரூபப்பிராப்தி நிர்ணயமானது அப்பிரமாணமென்றென்
புத்தியில்படுகின்றன "ஸ்ரீகுருமூர்த்தி" ஸரூபப்பிரம்மவித்துக்கு ஸரூபப்பிராப்திபூர்வகமாக அ
ரூபப்பிராப்தியாகிரபடியால் பிரமாணதூஷணமில்லை ஸ்வரூபப்பிரம்மநிஷ்டனுக்கு தன்னாலே
யேஅரூபப்பிராப்தியாகிரபடியா லரூபப்பிராப்திக்காகவேரைஸாதானந்தேடவேண்டியதில்லை
ஜகத்ஜீவேசுவரர்களான ஸகலப்பிரதியோககளும் நசிக்கும்பொழுதனுயோகியான சித்ரூபப்
பிரம்மம் தன்னால் லபிக்கிரபடியாலன்னியமான அரூபப்பிராப்தியான துபசரிக்கப்படுகின்ற
னவேயன்றி அரூபப்பிராப்தியானது கொள்ளத்தக்கதாக விதிக்கப்படவில்லை மிகவும்அவிஷய
மாகையா லதுதள்ளவும் கொள்ளவும்கூடாதல்லவா எப்படி தேகத்தியாகலக்ஷணமாயிருந்த
போதிலும் மரணமானது அடையப்பட்டுதென்று செல்லப்படுகின்றனவோ அப்படி நீர்நிச்ச
யித்துக்கொள்ளும் ஸ்வரூபாரூபப்பிரம்மங்க ளிரெண்டுக்கும் ஸ்ருதியாதிவசனங்கள் ஸமமாக
ஸகலப்பிரமாணங்களிலும் கேழ்வியாகிரபடியால ஸ்வரூபத்துக்குநாசமுண்டென்றும் ரூபத்
துக்குநாசமில்லையென்றும் சொல்லக்கூடாதென்று சொல்லக்கூடாது எப்படிஎனில் வெரகில்
லாவிட்டால் காரியஅக்கினிக்கு நாசம்காணுகின்றன காரணஅக்கினியானதரூபமாக ஸகலபுவ
னத்திலு மிருக்கின்றன அரணியில் காரணஅக்கினியும் வேதியில்காரியஅக்னியு மிருக்கின்றன
ஸ்வரூபாரூபங்களுக்கு காரியகாரணத்துவங்காணுகிரபடியால் காரியத்துக்கு ஸத்தியத்துவ
வசனமவதியுடன் கூடினதுதான் அப்படிஇருந்தபோதிலும் ஸ்வரூபப்பிரம்மஞ்ஞானத்தால்
மோக்ஷம் எப்படிகாரியஅக்கினியிலாகுதி செய்கிரதினுல் தீக்ஷிதர்களுக்கு ஸ்வர்க்கம்கிடைக்கி
ன்றனவோ அப்படிஅரியத்தக்கது ஆனுலிந்தஸ்வரூப அரூபப்பிரம்மங்களுக்கு சேஷசேஷித்
துவமாவது தர்ம்மதர்ம்மித்துவமாவதாகாது, ஸ்வரூபப்பிரம்மமே சேஷியும் தர்ம்மியுமாக
இருப்பதால் சேஷசேஷிதர்ம்மதர்ம்மியத்ததான அகோசர அருபபிரம்மத்தி லிவ்வியவகார
மேது, ஒன்றுக்கொன்றுதாரமாகையால் தர்ம்மதர்ம்மிகளுக்கு நாசமுண்டு ஆகிலும் தர்ம்மி



விஞ்ஞானத்தால்மோக்ஷமேதவிர மைத்ததுனுலில்லை, தர்ம்மமத்தஅரூபஞ்ஞானத்தால் மனே
நாசம்முதலானதஸம்பவமாகையாலோய்விதியே ஒருவனுக்கும் ஸம்ஸாரபயந்தீராது,ஸச்சிதா
னந்ததர்ம்மமுள்ள ஒருப்பிர்ம்மமேவியவகாரதெசையில் தர்ம்மியாகவும் பரமார்த்ததெசை
யிலதர்ம்மியாகவும் சொல்லப்படுகின்றனவென்றும் சொல்லக்கூடாது, ஏனெனில் பரமார்த்த
வஸ்துவுக்கரியக்கூடாமையும் வியவகாரதெசையிலிருப்பும் நேரிடுகின்றனவே, அரூபத்தைத்
தவிர ஸரூபம்வேராயில்லாவிட்டாலும் ஸரூபத்தைத்தவிர அரூபம்வேராதானென்று பிரஸி
த்தமானஅர்த்தத்துக்கு விரோதமுண்டாகிரது கஷ்டமல்லவா, தர்ம்மமத்தப்பிரம்ம மிரஜ்ஜு
ஸர்பம்போல் மந்தனுக்குதர்ம்மிபோல தோத்துகின்றன் அதினுல் வஸ்துபேதமெப்படியாகு
மெனில் தர்ம்மிபொய்யாகும்பொழுது ஸம்ஸாரத்தைநிவிர்த்திசெய்கின்ற ஒருவன்ஸித்திக்கவில்
லை, அஸத்தியத்தாலஸத்தியத்துக்கு நிவிர்த்திவரமாட்டாதல்லவா தர்ம்மமத்த அரூபப்பிரம்
த்தினிடத்தில் நிவிர்த்திசெய்கிரதர்ம்மமில்லையே பிராந்தியதிஷ்டானத்துவதர்ம்மமு மவ்விட
திலில்லாத்துனுல் திருஷ்டாந்தம் வியர்த்தமாயிற்று, மனதால்மனதைசேதித்தென்ற திருஷ்டா
ந்தமிருப்பதா லஸத்தியத்தாலஸத்தியத்துக்கு நிவிர்த்திவரலாமெனி லதில்சொல்லுகிரேன்கே
ளும் தமோமயமானமனதுக்கு ஸத்வமயமானமனதால் சேதத்தை அபிப்பிராயப்படுகிரபடி
யால் பேதமேஸித்தித்தது, எப்படிசாந்தஸித்தரான ஸன்னியாஸியைக்கண்டஜனங்கள் பயத்து
டன தன்னாலே தூரத்திலொதுங்கிரார்களோ அப்படி வாக்குக்கும மனதுக்குமெட்டாதென்ற
சுருதியுமிருப்பதால் மைத்தொன்றையே னபேக்ஷிக்கவேணுமெனில் ஸன்னியாஸியானவர்பய
த்துக்குக்காரணமாயிருப்பதால் திருஷ்டாந்தம்சரிஇல்லை, அவாங்மனஸகோசரசுருதியாலும்
மனேவாக்குக்களுக்கெட்டாததென்று சொல்லப்பட்டுதேதவிர அதுகளுக்கு நாசம்சொல்லப்
படவில்லை, ஆகையால் தர்ம்மமுள்ளப்பிரம்மஞ்ஞானத்தின னபேக்ஷயத்த அதர்ம்மப்பிரம்ம
ஞ்ஞானத்தால் பெரிதானபயமுண்டாகுமேதவிர வேரில்லை, "பிரம்மா" தர்ம்மமுள்ளப் பிரம்
மஞ்ஞானத்தின்னபேக்ஷயுள்ளவன் மந்தனென்று மந்தஅபேக்ஷயத்தவன் ஸ்வதந்திரனுகை
யாலுத்தமனென்றும்சொல்லலாமே தர்ம்மமத்தவஸ்து னொன்றிருக்கிரதாக தாங்களுமொப்பு
க்கொள்ளுகிரபடியா லதேஸித்தாந்தமாகசேஷிக்கலாமே ஆகையாலந்தஞ்ஞானத்தா லிதரா
பேக்ஷயன்றி சோகமோகாதிநிவிர்த்தியானது தன்னால்வரலாம் எப்படி நிலவத்தபோதிலும்
காலச்சந்திரனுலிருள்நீங்குகின்றனவோ அப்படிநீங்கலாம்இரவுமத்தியிலும் காலத்திலும்சந்திர
னிரெண்டுவிதமாகவிருந்தபோதிலு மொருவனே இரெண்டுவிதமாகத்தோத்துவதுபோ லொ
ருப்பிரம்மமே ஸரூபமாகவும் அரூபமாகவுமிருக்கலாம் உசிதங்களான ஸகலதிருஷ்டாந்தங்க
ளையுமெடுத்துக்கொள்ள நியமமிருப்பதாலிதையுபேக்ஷிக்கவும்கூடாது, "ஸ்ரீகுருமூர்த்தி" தர்
ம்மமுள்ளப்பிரம்மஞ்ஞானத்தின் னபேக்ஷயத்தவனுக்கு பயம்நீங்குமாகிலன்னமன்றியன்ன
ப்பாத்திரத்தைப்பார்த்தமாத்திரத்தில் பசிநீங்கும் அந்ததர்ம்மமத்தவஸ்துவானது ஸித்தாந்த
மாகசேஷிக்கிரதாயிருநதபோதிலும் ஸர்வதர்ம்மாபவாதஞ்செய்கிரசக்தி இல்லாத்துனுல் சோ
காதிநிவிர்த்தியிலதற்கு ஸ்வாதந்திரியமில்லை, காலத்திலிருள்நீங்கின தருணவுதயத்தாலென்று
நீரரியவில்லையா ஓய்பிரம்மாவே உமக்குமேதிப்படிப்பிராந்திவந்துவிட்டுது, சந்திரனுமொருகா
லத்தி லிரெண்டுவிதமாகக்காணுத்துனு லிரெண்டென்றே சொல்லவேணும் இரவில் நிலவத்த
சந்திரனைக்காணுத்துனுல் தர்ம்மியைத்தவிரவேராஇல்லைஎன்றகுத்தமும்வாராது, தர்ம்மதர்ம்
மிகளொன்றென்பதில் சந்திரசந்திரிகை திருஷ்டாந்தம்ஸரிஇல்லை, அக்னியுஷ்ணதிருஷ்டாந்த
த்தைச்சொல்லலா மவ்விடத்திலுமுபசாரமாகத்தான் சொல்லக்கூடியதாயிருக்கின்றன, அப்
படிஇருக்க தர்ம்மிக்குமதர்ம்மிக்குமெப்படி யபேதஞ்சொல்லலாம் தர்ம்மியானது சக்தியுள்ள
தாகையா லதர்ம்மித்துவத்தையு மன்னியதர்ம்மித்துவத்தையுமடையும், அதர்ம்மியானதொ
ருக்காலுமன்னியமாகமாட்டா, இப்படிஇருக்கசக்தியத்தவ தர்ம்மியானது தர்ம்மித்துவத்தை

யடைந்துதென்ற வும்முடையமதமெப்படியுக்தமாகும் அந்தஅரூபபிரம்மமானது தர்ம்மித்து வதெசைக்குமுன்னெதாவதொருசக்தியுடன் கூடியிருக்குமாகி லப்பொழுததுதர்ம்மியாகுமே யன்றி யதர்ம்மிஎன்றுசொல்லக்கூடாது, ஸர்வசக்திகளுமத்து வாக்குமனதுகளுக்கெட்டாதெ ன்றல்லவா அந்தப்பிரம்மம் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன, அதெப்படி யன்னியவிதமாகும் ஓய்பிரம்மாவே இவ்வளவெல்லாஞ்சொன்னதி லென்னமுடிவாகில் சொல்லுகிரேன்கேளும் உத்பத்திக்குமுன்னரூபப்பிரம்மமில்லைஎன்றும் பிரளயமானபின்னிருக்குதென்றும் ஸச்சிதா னந்ததர்ம்மியானது நூதனமாகவந்ததல்லவென்றும் நூதனமாகவந்தஜீவேசுவரர்களுக்குமுன் னுள்ளதென்று மரியத்தக்கது, ஆகையாலோய்விதியே ஜகத்ஜீவனீசனிவைகளுக்கெல்லாம்கா ரணமான சித்ரூபாத்மாவை முன்னுள்ளவஸ்துவாகவே நீரரிந்துக்கொள்ளும் இப்படிஞானகா ண்டத்தி க - வது பாதத்தில் ௧௦ - வது அத்தியாயம் முற்றிற்று.

## ௧௧-வது அத்தியாயம்.



"பிரம்மா" அய்யாசிஷ்யவத்ஸலரானஸத்குருவே ஸகலஸம்சயங்களையும் சேதிக்கிர தாயிருந்தபோதிலும் தங்களுடையவசனத்துனு லிப்பொழுதெனக்குப் பெரிதானஸம்சயமுண் டாயிருக்கின்றன ஆச்சரியம் என்னவெனில் ஜீவேசுவராதிவிகாரங்களுடைய வுத்பத்திக்குக்கா ரணம்சித்ரூபம் அதுகளின்லயத்துக்குக்காரணம் அரூபமென்று தாங்கள்சொல்லுகிரீர்கள் சுரு திகளோவெனில் எதில்பூதங்களுண்டாயித்தோ எதிலிருக்கின்றனவோ எதில்லயிக்கின்றனவோ அதேபிரம்மமென்று மென்னிடத்திலேயே ஸகலமுமுண்டாயிருந்து லயிக்கிரதென்றும் சொ ல்லுகிரபடியா லிவ்வத்வைதகாரணவாதத்தி லனேகசுருதிஸ்மிருதி புராணவாக்கியங்களிருக் கிரபடியாலும் சுருதிக்குவிரோதமன்றி யுக்திசெய்யவேணுமேதவிர வன்னியதாவாகக்கூடா தென்று சொல்லப்பட்டிருப்பதாலும் தங்களுடையமுகாரவிந்தத்திலுதித்த வாக்கியங்களெல் லாம் சுருதியாயிருந்தபோதிலும் பூர்வோத்தரவிரோதமன்றி யிருக்கவேண்டியதவச்சியமா கையாலும் தங்களுடையபூர்வவாக்கியங்களாகின்ற சுருதிகளுக்கு மிப்பொழுதுசொல்லப்படு கின்றவுத்தரவாக்கியங்களாகின்ற விச்சுருதிகளுக்கும் விரோதமன்றி தாங்கள்சொல்லவேண்டி யதென்றிப்படி பிரம்மாவால்கேழ்க்கப்பட்ட கருணாமூர்த்தியான தக்ஷிணாமூர்த்தியென்றஈசுவ ரன் பிரம்மாவை முகத்துக்குநேராக்கிக்கொண்டுசொன்னர் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்பிரம்மாவே ஸர்வஸம்சயங்களையும் சேதிக்கின்ற என்வசனத்தைக்கேளும் ஸாமான்யவிசேஷங்களாக சுரு திகளிரெண்டுவிதங்களாகு மதில்ஸாமான்யங்கள்பூர்வபக்ஷம் விசேஷங்கள்ஸித்தாந்தம் அதில் ஸித்தாந்தங்கள் ஸாமான்யங்களை யனுஸரிக்கவேண்டியதில்லை இபபொழுது நாம்சொல்கிரகார ணபேதவாக்கியங்கள் விசேஷஸித்தாந்தமாகையால் முன்சொல்லிய ஸாமான்யபூர்வபக்ஷகார ணாத்வைதவாக்கியங்களை யனுஸரிக்கவேண்டியதில்லை கோடியத்வைதவாக்கியங்களிருக்கட்டும துகளெல்லாம் ஸாமான்னியங்களாகையால் துர்பெலங்கள்தான் அன்னியதானுப்பத்திஎன்ற வொருப்பிரமாணமுமிருக்கின்றன அதுவும்முக்கியந்தா னெப்படிஎனில்கேளும் அரூபப்பிரம் மம்சக்தியத்தாகையா லுத்பத்திக்குக்காரணமாகாதுஸரூபப்பிரம்மம் சக்தியுள்ளதாகையால் நாசத்துக்குகாரணமாகாது வாக்குமனதுபிராணன் தேஜஸ்ஸிதுகளுக்கு சுருதியில்சொல்லப் படுகின்றலயமான தரூபப்பிரம்மம்வரையேதவிர வேரைஇல்லை, அதுஸரூபப்பிரம்மம்வரை யாகுமாகில் சுருதிக்குக்கோபமும் முக்தர்களுக்குத்திரும்ப ஜன்மமும்நேரிடும் விகாரங்களு க்கு ஸரூபத்தில் சேற்கையன்றி யரூபத்தில்நேராகசேர்க்கை கிடையாது எப்படிநாலுதிக்கு லிருந்தும் வருகின்றஜனங்களுக் கொரேதுவாரமுள்ளபட்டணத்துக்குள் பிரவேசிக்கும்பொ



ழுதத்துவாரத்தை யடையவேண்டியதவச்சியமோ அப்படி நாநாவிதவித்தையுள்ளவர்களுக்கு ம்மோக்ஷத்துக்கு ஸரூபப்பிரம்மசைதன்னியப்பிராப்தியான தவச்சியந்தான் "பிரம்மா" வாக் குமுதலானவிகாரங்களுக்கு தத்வசப்தமெப்படிகூடும் வேதாந்தத்தில் நிர்விகாரவஸ்துவுக்கல் லவா அந்தசப்தம்சொல்லப்பட்டிருக்கின்றன என்றிப்படி பிரம்மாவால்கேழ்க்கப்பட்ட குரு மூர்த்தியானவர் வராஹோபனிஷத்வாக்கியங்களால் சொன்னர் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்சதுர் முகரே பூர்வமும்முடையவராஹரூபியான பிதாவால் ரிபுமகரிஷிக்குச் சொலலப்பட்டிருக்கி ரது அதைஸாவதானமாகக்கேளும் "வராகர்" சிலர்களிருபத்திநாலுதத்வங்களைச்சொல்லுகிரா ர்கள் சிலர்கள் முப்பத்தாருதத்வங்களை சிலர்கள் தொண்ணூத்தாருதத்வங்களை அதின்கிரமங் களைச்சொல்லுகிரேன் காதுமுதலான ஞானேந்திரியங்கள் ௫, வாக்குமுதலான கர்ம்மேந்திரி யங்கள் ௫, பிராணாதிகள் ௫, சப்தாதிகள் ௫, மனதுபுத்திஅகங்காரம்சித்தம் ௪, இப்படி ௨௪ - தத்வங்களை பிரம்மவித்துக்கள் சொல்லுகிரார்கள் இதுகளுடன்கூட பஞ்சிகிருததத்வம் ௧, பிர திவிமுதலானபூதங்கள் ௫, ஸ்தூலஸூக்ஷ்மகாரணதேகங்கள் ௩, ஜாக்ரத்ஸ்வப்னஸுஷுப்தி என்றஅவஸ்தைகள் ௩, இப்படி ௩௬ - இதுகளுடன்கூட இருக்கிரது உண்டாகிரது வர்த்திக்கி ரது பரிணமிக்கிரது க்ஷயிக்கிரதுநசிக்கிரது என்றிப்படிவிகாரங்கள் ௬, பசிதாகம்சோகம்மோ கம் ஜரைமரணமென்றிப்படி யூர்மிகள் ௬, துவக் இரக்தம் மாம்ஸம் சதை குடலிலும் பென் றிப்படிகோசங்கள் ௬, காமக்குரோதலோப மோஹமதமாத்ஸரியங்களென்றிப்படி சத்ருக்கள் ௬, விசுவன் தைஜஸன் பிராஞ்ஞனென்றுஜீவன் ௩, ஸத்வம் ரஜஸ்தமஸ்ஸென்றுகுணங்கள் ௩, ஸஞ்சிதமாகாமிபிராரப்தமென்று கர்ம்மங்கள் ௩, வசனம்ஆதானம்கமனம்விஸர்கம் ஆனந்த மென்று ௫, ஸங்கல்பம் நிச்சயம் அபிமானம் நிர்மானம் ஸந்தோஷம் கருணைமைத்திரி உபே க்ஷைஎன்று ௮, திக்வாயுஸூரியன் வருணன் அசுவனிதேவதைகள் அக்னி இந்திரன் உபேந்தி ரன் மிருத்யுபிரம்மா சந்திரன்சதுர்முகன் ருத்திரன்க்ஷேத்திரஞ்ஞன் ஈசுவரனென்று ௧௫, ஆக கூடியதத்துவங்கள் ௯௬, சொல்லியதத்துவங்களுக்கு விலக்ஷணனும் ரோகமத்தவனும் வராக ரூபியுமான என்னை பக்தியுடனெவர்கள்பஜிக்கிரார்களோ அவர்க ளெந்தஆச்சிரமத்திலிருந்த போதிலும் மோக்ஷத்தையடையிகிரார்க ளிதில்ஸம்சயமில்லை "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய் தாமரப் பூவிலுண்டானவரே இப்படிவராகரூபியானவிஷ்ணுவால் விகாரங்களில் தத்துவசப்தம்சொல லப்பட்டிருப்பதாலதுகளில் தத்துவசப்தத்துக்குதடை இல்லை, இப்படியன்றியும் நிர்விகாரமா னபரதத்வத்தையே அடுத்திருப்பதாலதுகளுக்கு தத்வசப்தமுபசரிக்கப்படும்இப்படிக்கேட்டு பிரம்மாதிரும்பவும் பிரசினம்செய்கிரார், "பிரம்மா" ஸ்வாமிஎன்பிதாவானபகவான் விஷ்ணு வானவர்திரும்பவும் ரிபுவுக்கென்னசொன்னர் "ஸ்ரீகுருமூர்த்தி" கமலபத்ராக்ஷரும் ஸ்வாத்ம விஞ்ஞானஸமுத்திரரும் ஸகலவுலகத்தையுமிரெக்ஷிக்கிரதில் ஸமர்தரும் ஸர்வஞ்ஞரும் கருணா நிதியும் பிரம்மவித்தையை உபதேசிக்கிரதில் தனக்குஸரியானவரத்தவருமான அந்தமகாவிஷ் ணுவால் ரிபுவுக்குபதேசிக்கப்பட்டதைச் சொல்லுகிரேன்கேளும் ரிபுவென்றமகாயோகியான வர்கடினதவங்களால் வராகரூபியான லக்ஷ்மீபதியை ஸந்தோஷிப்பிவித்து பிரச்சினம்செய் தார் "ரிபு" அய்யாபகவானே சிரேஷ்டமானபிர்ம்மவித்தையை எனக்குபதேசியுமென்று கேழ் கப்பட்டவரும் பக்தர்களுடையமனப்பீடையை நசிப்பிவிக்கிரவருமானபகவான் சொன்னர், "பகவான்" தன்வர்ணாச்சிரமதர்ம்மத்தினுலும் தவத்தாலும் குருவைஸந்தோஷிப்பிவித்ததாலும் புருஷர்களுக்கு விவேகாதிநாலுஸாதனங்களுண்டாகும் அதுகளாவதுநித்தியாநித்யவிவேகம் இஹலோகபரலோகபோகவிராகம் சமாதி ௬, மோக்ஷஇச்சை இந்தநாங்கையும் பழகவேணும் இப்படிஇந்திரியங்களைஜயித்து ஸகலத்திலுமென்னுடையதென்றபுத்தியைவிட்டுஸாக்ஷிசைதன்ய னை என்னிடத்திலஹம்மதியைச் செய்யவேண்டியது துர்லபமானமனுஷ்யஜன்மத்தையடை ந்து அதிலும்புருஷனுகி அதிலும்பிராம்மணனுகி வேதாந்தசிரவணுதிகளால் மஹாவிஷ்ணுவு

டைய ஸச்சிதானந்தலக்ஷணமான அதிவர்ணாச்சிரமரூபத்தை எவனறியவில்லையோ அந்த அவித்வானெப்பொழுது மோக்ஷத்தையடையுவான் நானேஸாக்ஷிரூபிவேரையில்லை வேரை இருக்குமாகிலதுஸாக்ஷமேயாகாது, என்னுடையதில்லைஎன் றதிஷ்டமில்லை, என்னுடையதென்றது தன்னுலிஷ்டமில்லை, அதிசப்பிரேமைக்கிருப்பிடமாகையால் நான்ஸதாஅனுபவித்தேனிலலை, பிரபஞ்சமாகிரேனென்று பார்வைபிடுகிர நானேவிஷ்ணு நான்பிரகாசமில்லை என்றசொல்லானது எந்தப்பிரகாசத்துக்கு மூக்கியத்தடையாயிருக்கின்றனவோ ஸ்வப்பிரகாசனுகிய அந்த ஆத்மாவை அப்பிரகாசமெப்படிஸ்பரிசிக்கும் தானேவிழுங்குகிரவனும் நிராதாரனுமானவனை எவர்கள் நன்றுகநிச்சயித்தரியிகிரார்களோ அவர்களேவிஞ்ஞானிகளென்ரென் நிச்சயபுத்தி தன்பூர்ணாத்மாவைத்தவிர ஜகத்ஜீவனீசுவரன் முதலானதுகளில்லைமாயையுமிலலை நானதுகளுக்குவிலக்ஷணன் அஞ்ஞானமாகிர பெருமிருள்ரூபமும் அந்ததர்ம்மாதிலக்ஷணமுமானகறமம் ஸ்வயம்பிரகாசனுன ஆத்மாவாகிர என்னைப்பாறகிரதற்கு யோக்கியமாகாது ஸர்வஸாக்ஷியும் வர்ணாச்சிரமமத்தவனுமான ஆத்மாவை பிரம்மரூபமாகப்பார்த்தவன்தான் பிரம்மரூபமாகிரான் தோத்துகின்ற இந்தஸர்வப்பிரபஞ்சத்தையும் பிரகாசமானபரமபதமாக வேதாந்தப்பிரமாணத்தால் பார்தவனுடனே மோக்ஷமடையிகிரான் தேகாத்மஞானத்தைக் கெடுக்கிரதும் தேகாத்மஞானம்போ லுரைப்புள்ளதுமான ஞானமெவனுககு தன்னிடத்திலுண்டாயித்தோ அவன்மோக்ஷத்தை இச்சியாவிட்டாலும் மோக்ஷத்தையடையிகிரான ஸத்தியஞ்ஞானனந்தபூர்ணலக்ஷணனு மிருளுக்குமேலானதுமான பிரம்மானந்தத்தை ஸதாபார்த்தவன்கறமத்துனலெப்படிகட்டப்படுவான் ஜாக்கிரத்முதலான மூன்றுஸ்தானத்துக்குஸாக்ஷியும் ஸத்தியஞ்ஞானனந்தாதிலக்ஷணனும் நீநானென்றசப்தங்களின் லக்ஷியார்தமும் ஸகலதோஷங்களிலும் பத்தாதவனும் ஸர்வவியாபகனுமான ஸச்சிதாத்மாவை ஞானநேத்திரமேபாற்கும் பிரகாசிக்கிரஸூரியனை குருடன்போல் அஞ்ஞானக்கண்பார்க்கமாட்டா ஸத்தியப்பிரஞ்ஞானலக்ஷணமுள்ள அந்தபிரஞ்ஞானமேபிரம்மம இப்படிப்பிரம்மபரிஞ்ஞானத்தால் மர்த்யன் அமிருதனுகிரான் அந்தப்பிரம்மானந்தமத்வைதம் நிற்குணம் ஸத்யசித்கனம் அதைதன்ரூபமாகஅரிந்து யாதொன்றைத்தொட்டும் பயப்படமாட்டான் சின்மாத்திரமும் ஸர்வகெதமும் நித்யஸம்பூர்ணஸுகமும் நாசமத்ததுமான அபரோக்ஷப்பிரம்மமே நான்வேரில்லைஎன்று பிரம்மவித்துக்களுடைய இருப்பு ஜகத்தானதஞ்ஞனுக்கு துக்கக்கூட்டஸ்வரூபம் ஞானிக்கானந்தமயம்குருடனுக்கு புவனமிருளாகவும் நல்கண்ணனுக்குப் பிரகாசமாகவுமாவதுபோல் அனந்தனும்சித்கனனந்தனும் வராகரூபியுமான நாணிருக்கும்பொழு திரெண்டாவதேது பெத்தனெவன்முக்தனெவன் ஸர்வதேகிகளுடைய தன்ஸ்வரூபம் சின்மாத்ரம் கடம்போல் பார்க்கப்படுகிர தேகாதிக்கூட்டமானதுஸ்வரூபமாகமாட்டா, தன்னைத்தவிரவேரைபோல் தோத்துகினறசராசரஜகத்தை தன்னாத்மமாத்திரமாகஅரிந்து அதேநானென்றுபாவனைசெய் தன்ஸ்வரூபத்தைத் தானுகபுஜிக்கிரான் புஜீக்கத்ததுவேரில்லை அப்படிஇருக்குமாகி லிருக்கிரலக்ஷணமுள்ளது பிரம்மந்தான் பிரம்மஞ்ஞானியானவன் தோத்துகின்றஸகலஜகத்தையும் பார்த்தபோதிலும் தன்னைத்தவிர வேரையாகப்பார்க்கவேஇல்லை, என்ஸ்வரூபத்தின்ஞானத்தா லவன்கர்ம்மங்களால் கட்டப்படமாட்டான், எவன்சரீரேந்திரியாதிகளத்தவனும் ஸர்வஸாக்ஷியும் ப்ரமார்த்தஅத்வைதஞானமும் ஸுகரூபியும் ஸ்வயம்பிரகாசனுமானஆத்மாவை தன்ஸ்வரூபமாக ஸ்வானுபவத்தா லரியிகிரானே அவனேதீரன் புருஷோத்தமனென்றரியத்தக்கது, அவனே ஸகலத்துக்கும்ஹேது அவனேநான் ஹேரிபுவே அதாகநீயுமாகவேணும் ஸர்வரூபியாகஇருப்பதால் பிரபஞ்சானுபவம் ஸதாஇல்லை, ஸதாஸ்வரூபபோதானுபவமே இப்படிபார்க்கிரவன் பரிபூரணஞ்ஞானி அவன் பெந்தமுக்தனுமல்ல பெத்தனுமல்ல இப்படி அப்பயதீக்ஷிதரால் மொழிபெயர்க்கப்பட்ட குருஞ்ஞானவாஸிஷ்டத்தில் ௧௧ - வது அத்தியாயம் முற்றிற்று.



## ௧௨-வது அத்தியாயம்.

"பிரம்மா" ஸ்வாமி எதனுலெனக்கு தத்வார்த்தநிச்சயமாகுமோ அப்படிப்பட்ட எந்தவசனங்களைபகவான் ரிபுவுக்குச்சொன்னர், அதையுஞ்சொல்லுங்கள் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்தாமரப்பூவில்ஜனித்தவரோ திரும்பவுமெப்படி யும்முடையபிதா ரிபுவுக்குச்சொன்னரோ அப்படியே மோக்ஷகாரணமான தத்வார்த்தத்தைச்சொல்லுகிரோன், பகவான், தன்ஸ்வரூபத்தின்னனுஸந்தானத்தால் நர்த்தனம்செய்கிரவரும் ஸர்வஸாக்ஷியுமாகியஎன்னை எவனமூகூர்த்தகாலம்சிந்திப்பானே அவன் ஸகலபெந்தங்களிலிருந்து விடுபடுகிரான் ஸர்வபூதங்களுக்குள்ளிருக்கிர நித்தியமுக்தசைதன்னியாத்மாவாகிய பிரத்யகாத்மாவான என்பொருட்டே நமஸ்கரிக்கிரேன், ஹேதேவதையே நீயேநான் நானேநீ நீயானஎன்பொருட்டும் நானுன சிதாத்மாவாகியஉன்பொருட்டும் நமஸ்காரம் நானென்னசெய்கிரோனெள்விடத்துக்குப்போகிரோன்எதைகிரிக்கிரோன் எதைத்தள்ளுகிரோன் மகாப்பிரளயகாலஸமுத்திரஜலத்தால் பூரிக்கப்பட்ட புவனம்போலென்னுல்பூரிக்கப்பட்டிருச்குது, உள்ளும்வெளியும் தேகத்திலுமபிமானத்தை எவன் விடுவானே ஸர்வஸங்கத்தியாகியான அவனென்னையடையுவான் ஸம்சயமில்லை ஸர்வஸங்கமத்தவன் பரிபூர்ணனுகிரபடியா லென்னையடையுவதிலென்ன ஆக்ஷேபமிருக்கின்றன எவன் ஸர்பம்போல் ஸர்வதாஜனஸங்கத்தைவிடுவானே அவன் ஸர்வாங்கஸவுந்தரியமுள்ளஸ்திரியை புணம்போலெண்ணி காமத்தைவிட்டு முடிவில்லாதவிஷயாதிகளை விஷத்தைப்போலெண்ணி ஜகத்தில்பரமஹம்ஸனுகியவாஸுதேவன் நான்தான் இவ்வுலகம் ஸத்யமானப்பிரம்மத்தைத்தவிர வேரைஇல்லைஎன்று மூன்றுதரம்சொல்லுகிரோன் நான்ஸத்யமானபரப்பிரம்மமென்னைத்தவிரஸ்வல்பங்கூடவேரைஇல்லை ஜீவாத்மபரமாத்மாக்களுடையஸமீபத்தில் வாஸமானது ஐக்கியநிஷ்டைஎன்றுகருத்து உபவாஸமென்று சொல்லப்படுகின்றனவேதவிர தேகத்தை சோஷணஞ்செய்கிரதுபவாஸமல்ல பிரம்மமிருக்குதென்றரி வுபரோக்ஷஞ்ஞானம் பிரம்மம் நான்தானென்றரிவபரோக்ஷஞ்ஞானம் "பிரம்மா" ஸத்யம்ஞானமனந்தமென்றுபிரம்மஞ்ஞானமொன்ருகவல்லவா சொல்லப்படுகின்றன அப்படிஇருக்கஇரெண்டுவிதமாக எப்படிச்சொல்லலாம் இரெண்டாகஇருப்பதுஸத்தியமாகில் அப்பொழுது ௩ - ௪ - அனேகமென்றும் வியவஸ்தைஇல்லாமலாகுமே அனேகமானதும் மாயாமயமாகையால் விகாரிஎன்றுஸ்பஷ்டம் அப்படி ஞானமனேகமாகுமாகில் விகாரியாகும் விகாரஞ்ஞானத்தால் நிர்விகாரமோக்ஷமெப்படிகிடைக்கு மாகையால் ஞானம்மோக்ஷஸாதனமல்ல பெந்தமோக்ஷங்கள் மாயாகல்பிதங்களாகையா லனித்தியமாயிற்று அதனுல்தயிரமுதலானதுகள்போல் விகரிக்கிரபடியால் சொன்னதுயுக்தம்தானெனில்அனித்தியமானமோக்ஷம் ஸித்திக்கிரதற்காக எவனெத்னம்செய்வான் மோக்ஷசாஸ்த்ரங்களுடைய பிரவிர்த்திக்குத்தானென்னபிரயோஜனம் ஆகையாலய்யாசங்கரரே உலசத்துக்கு க்ஷேமத்துக்காக மோக்ஷத்தைநித்யமென்றும் நிர்ம்மாயமென்றும் தாங்கள்சொல்லவேணும் மோக்ஷத்துக்குஸாதனமான ஆத்மஞ்ஞானமுமேகமென்றே தாங்கள்ஸாதிக்கவேணும் தங்களால்ஸாதிக்கக்கூடாததொன்றுமில்லையே"ஸ்ரீகுருமூர்த்தி"ஓய்என்னஇப்படிசொல்லுகிரீர்சுருதியின்பொருளை நான்வேரைவிதமாகச்சொல்லலாமாசுருதிகளென்னைக்கூட சாஸனம்செய்கிரதுகளல்லவா உத்பத்திநாசம் பெத்தன் முக்தன் அதிகாரி முமுக்ஷு ஒன்றுமில்லைஎன்பது பரமார்த்தம் பெந்தமோக்ஷங்கள் மாயையால்கல்பிக்கப்பட்டதுகள் ஆத்மாவிடத்தில் பரமார்த்தமாக இல்லைஎன்று வெகுசுருதிகளால்சொல்லப்பட்ட அர்த்தத்தை வேரைவிதமாக என்னுலெப்படி சொல்லக்கூடும் மோக்ஷமனித்தியமெனி லொருவருமதற்காக யெத்தினம்செய்யமாட்டாரொன்றெண்ணவேண்டாம் போகங்களையனித்தியங்களென்றரிந்தவற்க ளுமதுகளில்பற்றுகிரார்களல்

லவா இதரசுருதிகளால் மோக்ஷம்நித்தியமென்றும் சொல்லப்பட்டிருப்பதாலதுகளில் விசுவாஸத்தாலும் ஸாதனங்களைச்செய்வார்கள் மோக்ஷமே அனேகமாகசுருதிகளில்சொல்லப்பட்டிருக்க அதற்குஸாதனமான ஞானமனேகமேன்பதிலென்னஸந்தேகம் விர்த்திஞ்ஞானமேபபடிபேதித்திருக்கின்றனவோ அப்படிஸ்வரூபஞ்ஞானமும்பேதமுள்ளதுதான் விர்த்திஞ்ஞானத்தால்ஸாதிக்கத்தக்கன ஆனந்தரூபமான மோக்ஷமுமனேகவிதம் பிரதிபெந்தத்துடன் கூடியஞானம்பரோக்ஷமென்றும்பிரதிபெந்த மத்தஞ்ஞானமபரோக்ஷமென்றும் சொல்லப்படுகின்றன, கிரமமுக்தி இச்சையுள்ளவன்லோகத்தில்மந்தாதிகாரியாவான்உடனேமுக்தி இச்சையுள்ளவன் உத்தமாதிகாரியாவான், இப்படியிருக்கஸாதனமும்ஸாதகனும் ஒன்ரென்று அப்பிரமாணவசனத்தையெப்படி தீர்மானிக்கலாம், ஆகையால் அதுவைதவாதம், மந்தாதிகாரிவிஷயம், பேதவாதம்சகல உத்தமாதிகாரிகளுக்கும் சுகத்தைச்செய்யும், இந்தபேதவாதம்ஸஜாதீயவிஜாதீயபதார்தவிஷயமில்லாதபடியால் உமக்குஅந்தபயத்தைஉண்டுபண்ணமாட்டா, ஓய்விதியேபேதத்துக்கும்அபேதத்துக்குமவெகுவாகஉபபத்திபிரமாணத்தை நானுமக்குசொல்லியிருக்கிறேனல்லவா அதையெல்லாம்சிந்தித்துக்கொள்ளும், அப்படியிருந்தும்ஹரியால்திரும்பவும்சொல்லப்பட்டதைச்சொல்லுகிரேன் ஸாவதானமாகக்கேளும்“பகவான்”எந்தகாலத்தில்தன்னுத்மாவை யோகியானவன் கேவலனாக அரியுகிறானோ, அந்தகாலம்முதல் ஜீவன்முக்தனாகிறான், மகாத்மாக்களுக்கு நானபிரம்மமென்ற நிசசயமே மோக்ஷஹேதுவாகையால் தேகாத்மபுத்தியைவிட்டு பிர்மமாயிருக்கிரேனென்று நிச்சயத்துக்கொள், யென்னுடையதென்றும் யென்னுடையதல்லவென்றும்ரெண்டுபதம்பெந்த மோக்ஷங்களுக்கு அதில்ஜந்துவானது ஆதியால்கட்டுப்படுகிறது உ-வதால் மோக்ஷத்தை அடையுகிரது, உள்ளும்வெளியும சகலத்திலும் சிந்தையைவிட்டுநிபுவெசுவஸ்தனாகஸதாயிரு, ஸங்கல்பமாத்திர ஸம்பந்ததனால் சகலஜகமும் அதின்விலாசமுமாகையால் அதைவிட்டுநிர்விகல்பத்தை ஆச்சிரயித்துயென்பதத்தை மனதில்பாவனைசெய், யென்னைசிந்திக்கிரது யென்னைச்சொல்லுகிரது ஒன்றுக்கொன்று யென்னைசொல்லிக்கொள்ளுகிரது யென்னிடத்கில்தானேபரமைக்கியமாகிகாலத்தைத்தள்ளு, இந்தப்பிரபஞ்சத்தில் சித்தேயிருக்குதென்றும் இதெல்லாம் சித்மாத்திரமென்றும் சித்பூர்ணமென்றும் நீ நான் லோகங்களெல்லாமசித்தென்றுபாவனைசெய், சிதாத்மைக்கிய விஞ்ஞானதனால் புண்ணியகர்மபலங்களிலுள்ள ஆசையைநிராசைபண்ணிசருவதாபத்துதலத்தவனாகவேண்டியது, அஞ்ஞானத்தாலுண்டான கர்திருகாரகர்களாலுண்டானகர்மத்தனால் சுருதியாலுண்டான ஆத்மவிஞ்ஞானமாகிரபெரிய தீபமெப்படிகெடுக்கப்படும், அனாத்மாவாகயிருக்குகையைவிட்டு ஜகத்திலிருப்பதில் விகாரமத்து ஓரேநிஷைடனாலுள்ளிருக்கினர் ஸம்வித்மாத்திரனாகவெண்டியது, எப்படி மகாகாசத்தில்கெடாகாசமடாகாசங்களிருக்கின்ரனவோ அப்படிசித் ஆகாசனாகியயென்னிடத்தில் ஜீவேசவரர்கள் கல்பிக்கப்படார்கள், யெதுதன்னுத்பத்திக்கு முன்னில்லையோ அப்படியேபிரளயகாலத்திலில்லையே அதேமாயையென்று பிர்மவாதிகளால் விவேகத்தால் சொல்லப்படுகின்ரன, மாயைக்கும்அதின்காரியங்களுக்கும் விலயம்வரும்போது ஈசுவரத்துவமுமில்லை ஜீவத்துவமுமில்லை, ஆகையால் ஆகாசம்போல்நான் உபாதியத்தசுத்தசித்துதான், சொல்லியலக்ஷணமுள்ள யென்னிடத்திலிருந்தேஜீவேசுவரநிருபமாக சேதனமாயும்அசேதனமாயுமுள்ளசகலஜகமும் உண்டாயித்து, ஈக்ஷணம்முதல்பிரவேசம்வரையுள்ளஸிரிஷ்டியானது ஈசனால்செய்யப்பட்டுது ஜாக்கிரத்துமுதல்மோக்ஷம்வரையுள்ளஸம்ஸாரமானதுஜீவனால்செய்யப்பட்டுது, திருணசகாள்முதல் யோகர்கள்வரையுள்ள மதஸ்தர்கள் ஈசுவரப்பிரமமுள்ளவர்கள், லோகாயதர்கள் முதல்ஸாங்கியர்கள் வரையுள்ளமதஸ்தர்கள் ஜீவப்பிருந்தியுள்ளவர்கள், அதுவைதப்பிர்மதத்துவத்தையெப்போது அரியவில்லையோ அப்போதுசகலர்களும்பிருந்தர்கள்தான்அவர்களுக்கு முக்தியேது இவடத்திலாவது சுகமேது, ஆகையால் முமுக்ஷுக்கள்னலே ஜீவேசவாதங்களில்



புத்திசெய்யத்தக்கதில்லை, பிர்மதத்துவத்தை நிச்சலமாகவிசாரிக்கத்தக்கது, உத்தமன்அதமனென்ரயெண்ணமுள்ளவர்களுக்கிருக்கட்டும்அதனால்என்னபிரயோசனம், சுவப்பனத்தில்கண்டராஜீயஅதிகாரத்திலும் பிக்ஷையெடுப்பதிலும் ஜாக்கிரத்தில்வந்தபின் சம்பந்திப்பானா, புத்தியின்பூர்ணவிலாஸம்ஜாகரமென்றுசொல்லப்படுகிரது, விகாருதி அத்தபட்டியாலெனக்குஜாகரமில்லை, சூக்ஷ்மநாடிகளில் ஸஞ்சாரமானது சுவப்னமென்றுசொல்லப்படுகிரது ஸஞ்சாரதர்ம்மதயென்னிடத்தில் சுவப்னமேது அஞ்ஞானத்கில் புத்திலயப்படும்போது நித்திரையென்று சொல்லப்படுகிரது, அஞ்ஞானமும் அதின்காரியங்களும்லயித்திருக்கிர என்னிடத்தில்யெப்படி நித்திரைஉண்டாகும், சுஷுப்திக்காலத்தில் சகலமும்லயித்திருக்கும்போது இருளால்சுத்தப்பட்டுபிரபஞ்சமத்தபெரிசான ஆனந்தசுவரூபத்தைபுசிகிறான், யிந்தமூன்றுஅவஸதகளிலும்ஸமானமாகசித்தனுடைய ஸம்பந்தத்தால்பார்கிறானோஅவன்தான் அபரோக்ஷஞானிஅவன்தான் பிர்மாவிஷ்ணுசிவன், இந்தஜாகரமானது தீர்கசுவப்னம்அல்லது தீர்கசித்தப்பிரமம்அல்லதுதீர்கமனோராஜியம் இபபடிப்பட்ட ஸம்ஸாரம்துக்கசமுத்திரம், தூங்கியெழுந்திருந்து மருபடிதூங்கிரவரையும் பிர்ம்மமொன்றையே சிந்திக்கவேண்டியதுஅவித்தியாகல்பிதமான சசலவிகாரத்தையும்விலாபனம் செய்யவேண்டியது ஆரோபிதஜகத்தை அழித்ததனால் சித்தம்யென்சுவரூபமாககல்பிக்கப்பட்டுது, பெரிதானகாமாதி ஆருசத்துருக்களையும் அடித்துவிழதட்டினதனால் மதித்தயானைபோல் அத்துவைதகேவலாத்மாசேஷிததான், இந்த்தேகமிப்போதுநசிக்கட்டும் அல்லது சந்திர நக்ஷத்திரங்களிருக்கும்வரையிருக்கட்டும் அதுனால்சிததேகனாகியயெனக்கு என்னவிசேஷமிருக்குது, கும்பமிருந்தாலுமநசித்தாலும் அதின்ஆகாசத்துக்கு எருவிசேஷமுமில்லாததுபோலாகிக்கத்தக்கது, யெப்படிபுத்நிலிருககிரசட்டையைபாம்பானது அபிமானிக்கவில்லையோ அப்படிபிர்ம்மவித்சிரேஷ்டனானவர் ஸதூலஸூக்ஷும சரீரங்களை அபிமானிக்கமாட்டார், சாஸ்த்ரப்பார்வையாலுண்டான பரோக்ஷஞ்ஞானத்தால் பிரபஞ்சத்தில் பரமார்தப்பார்வைநசிக்கும் அபரோக்ஷஞ்ஞானத்தினால் புனர்ஜன்மஹேதுவான மாயையின் அம்சம் நசிககும்பிராரப்தனாசத்தால் தோத்துதல்நசிக்கும்இப்படிமூன்றுவிதமாகதன்மாயைநசிக்கும், தன்னிடத்தில்பிர்மத்துவயோகம்செய்தால் ஜீவத்துவம்நீங்காது பிராரிபாவிகமாக அனுசரிக்கும், விதேகமுக்தியான அத்துவைத்தத்துவத்தை அரிந்தனுபவித்தால் பிராரப்தவாஸனை நிவிருத்தியாகும், ஸஞ்சிதாகாமிகர்மங்கள்நசிக்கும்போது அஞ்ஞானவிபரியயங்கள்க்ஷயிக்கும் பிராரப்தத்தின்முடிவில்தேகஹானி இப்படிசகலமாயையும்க்ஷயிருக்கிரது “இப்படி அப்பய தீக்ஷிதரால் செய்யப்பட்டத்துவஸாராயணசந்திரிகையில் ஞானகாண்டத்தின் - ௧ - பாதத்தில் ௧௨ - வது அத்தியாயம் முற்றிற்று”

## ௧௩ - வது அத்தியாயம்.

ஸருவகர்ம்மமும்க்ஷயிக்கும்போது சகலமாயையும் நிவிர்த்திக்கிரபடியால் சகலதேகமும்நசித்தவன் அரூபப்பிரம்மத்தை அடையிகிறான், இருக்கிறதென்றுசொல்லும்போது ஜகமெல்லாம் ஸத்ரூபமான அந்தப்பிரம்மமாக விளங்குகிரதென்றுசொல்லும்போதும் ஜகமெல்லாம்சுயம்பிரகாசமானபிரம்மமே, ஊஷர்பூமியில்சாணப்படுகிரஜலமெல்லாம் ஊஷாபூமிமாத்திரமேஅப்படியெ இந்தமூன்றுஜகமும் விசாரத்தினால் சின்மாத்திரமே, அஞ்ஞானமேயில்லை அப்படியிருக்க அதின்காரியமானஜகத்தின் பிரசங்கமேது ஜீவனீசன்தேசிகனென்ற விகல்பகதையானது வெகுதூரத்தில்தான், யேசாந்தகேவலசிதேகாச சுவபாவமான கேவலப்பிரம்மமேநான் பரிபூர்ணமாயிருக்கின்றேன், பொதமாகிரபூர்ணசந்திரன் மொகமாகிராகுவால் கிரஸிக்கப்பட்டகாலத்தில் ஸ்நானந்தானம் யாகம்முதலானகிர்யை மோசனவரைவிருதாவாகவே

யிருக்கின்றன, விஷயத்தைதியஜிக்கிரதுதுர்லபம், தத்துவதெருசனமும்துர்லபம், ஸஹஜாவன
ஸ்தயும்துர்லபம் ஸத்குருவின்கருணையுள்ளவர்களுக்குமூன்றும் ஸுலபமே,சத்திபொதமுண்டா
கிஸருவகர்மத்தியாகியானயோகிக்குஸஹஜாவஸ்தைதானேஉண்டாகும், ரஸத்துக்குப்மனதுக்
கும் சுபாவமாகவேஅலேவுண்டு அந்த இரெண்டுகளின்பெந்தம் பூமியில்ஸித்திக்கமாட்டாது
மூர்சையடைந்தவன் மைத்தொருவனுடையவியாதிகளை தீர்ப்பானேயாகில் மரணத்தையடைந்
தவன் மைத்தொருபிணத்தை ஜீவினுடன்கூட்டிவைப்பானுகில்கட்டுபபட்டவன் ஆசாசத்தில்
பக்ஷிகளைப்போல் ஸஞ்சரிப்பானேயாகில்ரஸமுமனதும்பிர்ம்மமாகும் "பிர்ம்மா" அய்யாகுரு
ஞதரோயென்பிதாவான விஷ்ணுவின்னம்சமாயிருந்தபோதிலும் வராகம்நிகிருஷ்டதேகமுள்ள
தாகையால் அதற்கு பிர்ம்மநிஷ்டயை நானெண்ணவில்லே, "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய் பிர்ம்மாவே
ஸ்ரீமானுகியமுருரியானவர் பன்ரியின்னுருவத்தால் சொபிக்கிறவர் தனக்கு அகண்டசிதாத்மத்
துவத்தைச் சொல்லியிருக்கிருரதைச்சொல்கிறேன் கேளும் "பகவான்" ஒருவஸ்துவானது
நானுசுவரூபமாக ஒருக்காலுமாகமாட்டாது ஆகையால் அகண்டனுகவே யிருக்கிறேன்யெ
ன்னே தவிர ஒன்றுமில்லே காணப்படுகிறது கேழ்க்கப்படுகிறதெல்லாம் பிர்ம்மத்தைத் தவிர
வேறையில்லே, நித்தியசுத்தவிமுக்தமாயும், யெகமாயும், அகண்டானந்தமாயும், அத்துவைதமா
யும், உள்ளது பிர்ம்மம், ஆனந்தரூபனுகிய அகண்டபூதனே நான் பரனுக்குப் பரனுன கனசித்
பிரசாசனே நான், எப்படி மேகங்களாகாசத்தை சம்பந்திக்கிறதில்லேயோ அப்படி ஸம்ஸாரது
க்கங்களென்னே சம்பந்திக்கிறதில்லே,நன்ருகத்துச்கங்கள் நசித்ததினுல் சருவமும் சுசமென்றரி,
அஸத்திய நாசத்தினுல சருவத்தையும் சத்ரூபமாக அரி, தோத்துகிறதெல்லாம் சித்ரூபந்தான்
ஆகையாலென்ரூபத்தை அடைந்தால், ஜன்னம்மரணம்போக்குவரவு விமலம் அறிவுஒன்று
மில்லே, யொகிசிரேஷ்டனுக்குசகலமும்ஸத்மயமாகவேவிளங்குகின்றனவல்லவா,சத்தியசித்கன
மாயும்அகண்டாதுவைதமாயும் சருவதிருச்சியமத்ததாயும் நிராமயமாயும்உள்ள எந்தபதம்விம
லமோ அந்தஅக்ஷாசிவபதம் ஸதாநானென்றுமவுனத்தைஆசசிரயத்துக்கொள், ஜன்மமரணசுக
துக்கங்களத்ததாயும் ஜாதிநீதிகுலகோத்திரங்களத்ததாயும் சித்தில் விவர்தமான இந்தஜகத்து
க்குக்காரணமாயும் உள்ள அதே நானென்றுமவுனத்தை ஆச்சிரயித்துக்கொள், ஒருவனுயும
பூர்ணஅத்துவய அகண்ட சேதனமாயும் பிரபஞ்சபேதசம்பந்தங்களத்ததாயும் அத்துவைத
உத்தமஞ்ஞானம் சமாயுமுள்ள அதே நானென்று மவுனத்தை ஆச்சிரயித்துச்கொள். பாதிக்கப்
டடாமைனுலும் மூக்காலத்திலும் யெகரூபமாயையாலும் இந்தஸத்ரூபத்துவமெனக்கு ஸ்தாயி
ருக்கிறது. சுஷுப்தியிலுள்ளசருவசுசத்தைக்காட்டிலும் பெரிதான நிருபாதிகநித்திய சுகரூபத்
துவமிருப்பதால் சதாயெனச்கு ஆனந்தரூபத்துவமுண்டு, யெப்படி சூரியகிரணத்தினு லிருள்
நசிக்கின்றனவோ அப்படி ஹரிசூரியகாந்தியினுல் கனமானஸம்ஸாரகாரணமான தமொகுணம்
நசிக்குமன்றிமைத்தொன்றினுலும் நசியாது, என் சாணஸ்மாணத்தினுலும் பூஜைனுலும் ஜந்து
வானது தன் தமஸிலிருந்துவிடுபடுகிருன். ஜனனமரணநாசத்துக்கு காரணம் யென் சரணஸ்
மரணத்தைத் தவிரவேறையில்லே, யெப்படி லோகத்தில் தரித்திரன் தன் இச்சையினுலே தனிக
ளே ஆதரவுடன் துதிக்கிருனே அப்படி விச்வகர்த்தாவைதுதிப்பானுகில் யெவன் தான் பெந்
தத்திலிருந்து விடுபடமாட்டான் ஆதித்திய சன்னிதியில்சகலஉலகமும்சேஷ்டிப்பதுபோலயெ
ன் சன்னிதியில்தான் சகலமும்சேஷ்டிக்கின்றன, கிளிஞ்சலில்வெள்ளிகல்பிக்கப்படுகிறதுபோல்
யென்னிடத்தில் மஹத்முதலான ஜகமெல்லாம்கல்பிக்கப்படுகின்றன, சண்டாளதேகத்திலும்
பசுமுதலானதேகத்திலும் பிராமணதேகத்திலும் அன்னியங்களிலும் ஒன்றுக்கொன்றுதாரதம்
மியமிருந்தபோதிலும்அதுகளில்நான் தாரதம்மியமன்றியிலேயிருக்கின்றேன். எப்படிதிக்பிரம்ம
நசித்த பின் திக்குகள் கிரமமாகவே பிரகாசிக்கின்றனவோ, அப்படிவிஞ்ஞானத்தினுல் நசித்த
ஜகமெனக்குக்காணவேயில்லே தேகமிந்திரியம் பிருணன்மனது புத்தி அகங்காரம்சித்தம்மாயை



ஆகாசம் ஜாதிஜகமொன்றுமில்லே செய்கிரவன்புசிக்கிரவன் புசிப்பிவிக்கிறவனுமில்லேகேவலசித்
ஸத் ஆனந்தப்பிர்ம்மே ஜனுரதனஞன நான் ஜலத்தின் அலேவுனுலேயே சூரியனுக்கு யெப்படி
அலேவோ, அப்படிஅகங்காரசம்பந்தத்தினுலேயே ஆத்மாவுக்கு ஸம்ஸாரம், ஸம்ஸாரத்து
க்குசித்தமேகாரணமாகையாலதைபிரயத்தினத்துனுல் சோதிக்கவேண்டியது இப்போதுசித்த
மபெரிசென்பதிலென்னவிசுவாசம். ராஜாக்களுடைய தனமெங்கேபிர்மத்தினுடைய ஜகத்து
க்கள்தாமெங்கே முன்னுள்ள ஜகத்துக்களும் போய்விட்டுதுகள் ஸிருஷ்டிப்பரம்பரைகளும்
போய்விட்டுதுகள்,பிர்ம்மாக்களுடைய கோடிகள்போய்விட்டதுகள் புழுதிபோல்ராஜாக்களும்
நசித்துப்போய்விட்டார்கள், வித்துவானுக்கு அத்தியாத்மாபிமானமும் ஆஸுரத்துவத்துனுல
ப்படியேநசித்துவிட்டுதுகள், வித்துவானுக்கு ஆஸுரமுண்டாய்விட்டால் தத்துவதெருசனம்
நிஷ்பலம், ஆகையால் வித்துவானுக உள்ளவன் ஆஸுரபாவத்தை ஸருவதாதியாகஞ்செய்ய
வேணும், காமாதிகளெல்லாமெப்போது உண்டாகிரதுகளோ அப்போதே விவேகஞ்ஞான
அக்கினியினுலெதகிக்கப்படுகிரதுகள் அப்படியிருக்கஅதுகள்திரும்பமுளேக்கிரதேது, அன்னி
யனிடத்தில் குத்தத்தைப்பார்கிரதிலெப்படி சமர்த்தனுகிருனே அப்படிதன்குத்தத்தில்பார்
வையுண்டானுலெவன்தான் மோக்ஷமடையமாட்டான் "பிர்ம்மா" சுவாமிவராகரூபியாயுள்ள
ஹரியால்தனக்கு அகண்டைகத்துவமானது அடிக்கடிஆதரவால் சொல்லப்பட்டிருக்கின்ரன
அப்படி இருக்கபிர்ம்மரெண்டுயென்று தங்களாலெப்படி சொல்லப்படுகிரது, தங்களாலது
விஷயத்தில் அனேகம்பிரமாணம்சொல்லப்பட்டிருந்தபோதிலும் அத்துவைதவாதம்யெப்படி
ஸாமான்னியமாகுமென்று யென்மனதில் அடிக்கடிதோத்துகின்ரன, ஆத்மாவுக்கு அகண்டத்
துவம்வாஸ்தவமா அல்லது கண்டத்துவம் வாஸத்வமா, அகண்டத்துவம் வாஸத்வமாகில்
காரியபேதமாகபரிணுமவசத்தால் காரணத்துக்கு சூன்னியத்துவம்வருமே,கண்டத்துவம்வாஸ
த்வமாகில் ஆத்மாஅவயவத்துடன் கூடினவனுவானே, சுருதிகளோவென்ருல் கண்டத்துவம்
அகண்டத்துவமிரெண்டையும் சொல்லுகின்ரன, இரெண்டுக்குஸாமானுதிகரணியமென்ரசேர்
கைகூடாதே, காரணசூன்னியத்துவகுத்தம் வருமலிருக்கிறதற்காக விவர்தவாதத்தை அடுத்து
பரிணுமவாதத்தைஉபேக்ஷித்து ரஜ்ஜுஸர்பவியாயமாகஜகம்பிருந்தியால்கல்பிக்கப்பட்டுதென்
றும் பால்தயிர்போல் பரிணமிக்கவில்லே யென்றும்சொல்வீர்களானுல் அப்போதுசுருதியில்
சொல்லப்பட்டிருக்கிர பரிணுமவாதம் வியர்த்தமாகிரது ஆக்ஷேபத்தை அனுசரியாதஸமா
தானமும் நேரிடுகின்ரன்வே,யெந்தவாதத்தில் ஆக்ஷேபஞ்செய்யப்பட்டுதோ அந்தவாதத்தால்
சமாதானம்சொல்லுகிரதல்லவா யுக்தமாகும், பின் அவயவகுத்தம் வராமலிருக்கவேண்டியத
ர்க்காக வித்யாமயத்துவத்தை யடுத்து மாயை அவித்தைகளின் ரூபத்தைத் தள்ளி வித்யா
சத்திவிலாஸத்தால்தானே அவயவியாயிருக்கிரபிரம்மமென்றும்மாயை அவித்தயின்ஸம்பந்தப்
பட்டதுபோல் அனித்தியங்களில்லேயென்றும் சொல்வீருகில்,அப்போதுஅவயவகுத்தமானது
உபசாரமாக நிவிருத்தியாகின்றனவே தவிரமுக்கியமாகவில்லே, வஸ்துதேசகாலம்மூன்றுகளா
லும்ஆத்மாவுக்குபேதமெங்கும் நிஷேதிக்கப்பட்டிருப்பதால்யெவ்வளவும்பேதம்கூடாது,ஆகா
சம்போல் சகலவஸ்துதேசகாலங்களிலும் ஆத்மாவியாபித்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கி
ன்ரதல்லவா, ஆத்மாவின் அபேதமும்பேதத்தை அபேக்ஷிக்கிரபடியால் ஸப்பிரதியோகிகமாயி
த்து அதுனுலாத்மாவின் நிர்விசேஷத்துவத்துக்கு ஹானிவருமே, ஆகையால்பேதம் அபேதம்
இரெண்டுமத்த நிஷ்பிரதியோகிக ஆத்மாமாயை அவித்தைவித்தை மூன்றையும்தள்ளிமேலிரு
க்கின்ரன ஆகையாலேகத்துவம் அனேகத்துவம் கண்டத்துவம் அகண்டத்துவம் முதலான
சகலகுணங்களும் இதிலில்லேயென்றென்னுடையபுத்தி இப்படி கேட்டுயகாகாருணிகருயும்கு
ருவாயுமிருக்கின்றமகாதேவர்பிரம்மாவை அமிருதத்தைபெருக்கின்ரவாக்கியத்தைசொன்னர்
"ஸ்ரீகுருமூர்தி" ஓய்பிரம்மாவேஅத்தியாத்மவிஷயமானஇந்தமனனம்நல்லதுதான் அப்படியிரு

ந்தபோதிலும் கொஞ்சம்சொல்லவேண்டியதிருக்கின்றன ஆதரவுடன்கேளும், ஸேதுவியபதேச மென்றும் உன்மானவியபதேசமென்றும் ஸம்பந்தவியபதேசமென்றும் பேதவியபதேசமென் றும்நாலுவியபதேசம் வேதாந்தங்களில் பிரஸித்தமல்லவா அதுகளில் - க - வதிலாத்மா அகண் டன் - உ - வதிலாத்மாகண்டன் - ங -வதில்கண்டாகண்டன்தியாதிர்த்தியேயமென்றபேதமுள்ள ச - வதில் பிரஸித்தமானகண்டத்துவத்தையே அனுவதிக்கின்றன. உன்மானவியபதேசத்தைத் தவிரமைத்தமூன்றுவியபதேசங்களால் பரப்பிர்ம்மத்துக்ககண்டத்துவம் சொல்லப்பட்டிருந்த போதிலுமதுனல் க..டத்துக்குகண்டத்துவமெப்படிகூடுமென்று ஸம்சயமுமக்குண்டாகும் உன்மானவியபதேசத்தால் ஸம்சயமெவ்வளவுமில்லை கண்டனுன இந்தஜீவாத்மாவுக்ககண்ட னுனபரமாத்மாவுடன்தத்துவமஸி என்றமகாவாக்கியத்தாலைக்கியஞ் சொல்லப்பட்டிருக்கின் றனஆகையால் பரமாத்மாவின்னகண்டத்துவமானது வெகுப்பிரமாணங்களுடன் கூடினது, அப்படியே திருபாத்சுருதியாலந்தப் பிர்ம்மத்துக்கேஸ்வகெதபேதத்தால் கண்டத்துவமும் பிரமாணஸகிதந்தான் ஹரியானவர்தனக்குச்சொல்லிய அகண்டபோதரூபத்துவத்தை உன் மானசுருதிசேஷமாக அரியத்தக்கது அவஸ்துவியவஹாரத்திலல்லவாகண்டத்துகு நித்தியத்து வமுமாகும் வஸ்துவியவஹாரத்திலந்த அகண்டாத்மாவுமனுவாதயோக்கியனுகிறபடியால்சொ ல்லியநித்தியத்துவம்கவுணந்தான், ஸர்வதர்ம்மமத்த நிஷ்பாதியோகிகாத்மா எப்படிசானே தூரமிருக்கின்றானே அப்படியே இருக்கட்டும் உமக்குநூருவயஸ்சென்றபின் ஸகலயதிகளு டன்கூட அந்த வஸ்துவடையத்தக்கதாகையாலிப்பொழுததிலதிகாரகெந்தங்கூட இல்லை. ஞாதிர்த்துவவியவஹர்த்திர்த்துவாதி அவித்யாதர்ம்மமுள்ள நீர்சொல்லக்கூடாத அந்தவஸ்து வையேன்சொல்லுகிறீர் ஸ்மரிக்கக்கூடாததையேன்ஸ்மரிக்கிறீர். எந்தவஸ்துவிலும்முடைய பிதாவுக்குக்கூட அதிகாரமுண்டோ அதைச்சொல்லுகிறேன்கேளும் எதுவித்யாசக்திவிலாஸ த்தால்மூன்றுவிதமாகத்தானே விளங்குகின்றனவோ மாயைஅவித்தைமுதலானதுகளத்தசித் ரூப அவயவமுள்ள அதுபெரிது தேசகாலபரிச்சேதமத்தபடியாலது தன்பரிச்சேதமிருந்த போதிலும் அபரிச்சின்னந்தான் அந்தஆத்மவஸ்துவானது நித்தியவஸ்துபரிச்சேதமுள்ளது தான்அகண்டத்துவத்தில் காரணஹானிமுதலான எந்தக்குத்தங்கள் சொல்லப்பட்டதுகளோ அதுகளெவ்விதமாயாவது நீங்கமாட்டாதுகள் சண்டாளாதிகளில் பரமாத்மாவுக்கு தாரதம் யத்தைஹரியானவர் பிரதிஷேதித்தது ஸாமான்னியபோதனம் வித்வான்களுக்கு தாரதம்யமு ..படிஇருக்கின்றனவோ அது அப்படியே வேத்தியமானப்பிர்ம்மத்திலுமுண்டு வித்வான் களுக்கும் வேத்தியததுக்கும் அபேதமிருப்பதாலந்ததாரதம்யவிசேஷஉபதேசம்ஸாமான்னி யத்தை பூர்வமபேக்ஷிக்கிரபடியால் குத்தமில்லை வியவகாரதெசையில்ஸகலத்துக்கும் தாரத ம்யமுண்டென்பதுஸகலருக்கும்ஸம்மதமல்லவா ஆகையாலதுஸச்சிதானந்தரூபியும்வியாபக த்துவாதி தர்ம்மமுள்ளதுமான பரமாத்மாவுக்கும் வியவஹார தெசையிலிருப்பதால்கூடும் இந்தபரமாத்மாபெந்தாவஸ்தையை அபேக்ஷித்துபரமார்தனுயிருந்தபோதிலும் மோக்ஷாதீதா வஸ்தையை அபேக்ஷித்துவியாவஹாரிகந்தான் ஆத்மாமோக்ஷஸ்வரூபியாகையால் மோக்ஷத் துக்குப்போலாத்மாவுக்கும் தாரதம்மியமவச்சிய மிருக்குமிதில் பிரமாணங்களுமிருக்கிறது கள்அரூபப்பிர்ம்மஸ்வரூபமே மோக்ஷமென்று சொல்லக்கூடாதுமுக்தியதீதசுருதி இருப்பதா லுமரூபாத்மாதீதசுருதிஇல்லாத்தானுலும் அரூபப்பிர்ம்மமேமோக்ஷஸ்வரூபமென்று வித்வான் கள்சொல்லமாட்டார்கள் ஆகையாலோய்பிர்ம்மாவே ஸர்வவியாபகனுன சித்ரூபபரமாத்மாவு க்குதன்னலேயேதாரதம்யம் சுத்தகுணத்திரயத்தாலுண்டென்றுநிச்சயமாக அரிந்துகொளும்

"இப்படி அப்பயதீக்ஷித ரவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட குருஞ்ஞான வாஸிஷ்ட தத்துவ ஸாராயண சந்திரிகையின் ஞானகாண்டத்தில் - க - வது பாதத்தில் - கரு - வது அத்தியாயம் முற்றிற்று.



## கசு-வது அத்தியாயம்.

"பிரம்மா" அய்யாஸர்வலோகேசுவரரே ஞானவைராக்கியங்களைக் குடுக்கின்றவலொ தங்களுக்கு நமஸ்காரம்செயகிரேன் சுருதியில்சொல்லப்பட்ட மூன்றுவாதங்களுக்கும் தார தம்யத்தைஎனக்குச்சொல்லவேணும் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்விதியே க - வது ஆரம்பவாதம் உ - வதுபரிணமவாதம் ங- வது விவர்த்தவாதம் சிரேஷ்டமாகச்சொல்லப்படுகின்றன தந்து ர்ணநாபிமுதலான் அனேகவிததிருஷ்டாந்தங்களால் கரரியத்துக்குகாரணத்திலிருந்து க - வது ஆரம்பத்தை பெரியோர்கள்சொல்லுகிறார்கள் ஙதில மந்தனதிகாரியாவான் உத்பத்திக்கிரமத் தைச்சிந்திக்கிர அந்தமுமுக்ஷுவானவன் தன்னிடத்தில் கிரமமாக ஸ..லத்தையுமுபஸம்ஹா ரஞ்செய்கிரான் மண்கடம்முதலானதிருஷ்டாந்தங்களால் காரணமானபரமாவுக்கு காரியஜீ வாதிரூபமாக பரிணமம் சுருதியில்சொல்லப்பட்டிருக்கின்றன இகில்மத்தியமனதிகாரியாவான் தனக்குதாதாத்மியத்தைசிந்திக்கிர அப்பியாஸியானஅவன் அகண்டசித்ரூபத்தில் நிலைப்பான் இரஜ்ஜுஸர்பாதிதிருஷ்டாந்தங்களால் காரணாத்மாவிடத்தில் காரியத்துக்கு கல்பிதத்துவம் வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன, அதுமூன்ராவதான விவர்த்தவாதம்இதிலுத்தமன திகாரியாவான் தன்னைத்தவிரஇரெண்டாவதில்லாத அந்தஜீவன்முக்தன் கிரமமாக அரூபப்பி ரம்மத்தையே அடையுவான், இந்தமூன்றுவாதங்களும் ஜகத்ஜீவன் பரமாத்மா மூன்றுகளி லும்வித்தியாஸமாகசொல்லப்படும் எப்படிஎனில அதையும்சொல்லுகிரேன் ஜகத்தின்விவர்த் தத்தைவதிக்கிரவர்களைக்காட்டிலும் ஜீவர்களின்வர்த்தத்தை வதிக்கிரவர்களுத்கிருஷ்டராவார் கள் அவர்களைக்காட்டிலும் பரமாத்மாவின்னரம்பாதிவாதிக ளுத்கிருஷ்டராவார்கள் இப்படி யாகும்பொழுது மூன்றுவாதங்களுடைய கிரமநிர்ணயமானது பிடிக்கப்படும் விவர்த்தத்தைக் காட்டிலுமாரம்பமுத்கிருஷ்டமாயித்தல்லவா ஸச்சிதானந்தரூபியான ஆத்மாவுக்காரம்பம்முத லானதெப்படிஎனில்கேளும் அனுஸந்தானத்தாலாத்மா எபபொழுதாவிர்ப்பவிக்கின்றனவோ அப்பொழுததற்கந்த அதிகாரியிடத்திலிருந்தாரம்பமேயன்றி நிஷ்பிரதியோகிகாத்மாவிடத்தி லிருந்தாரம்பமில்லை அந்தசித்ரூபஆத்மாவுக்கு பிரம்மவித்சிரேஷ்டனிடததில் பரிணமம்ஆகா சபுஷ்பம்முதலான திருஷ்டாந்தத்தாலரியப்படுகின்ற விவர்த்தவாதமானது அரூபமும்துவந் துவமத்ததும் பாகியோகியத்ததுமான பரமாத்மாவிடத்தில்ஸித்திக்கும் இந்தஅரூபத்தில்ஸக லவிகிருதிகளும் பிரகிருதிகளும் லயிக்கிறதுகளே தவிரஉண்டாகிறதில்லை ஜகத்ஜீவனீசனென்ற இந்தஸகலவிகிருதிகளும் பிரகிருதியினிடத்திலிருந்துண்டாகிறதுகள் அதுகளிலேயே வேரை யாகஇருக்கிரதுகள் பிரகிருதிகளிடத்திலேயே விகிருதிகளுக்கு லயம்வருகிறதாயிருந்தபோதி லும் வாக்குமனதுகளுக்கெட்டாத அரூபத்தினிடத்திலேயே முக்கியமாகஎண்ணத்தக்கது தா ரதம்யமாயிருக்கின்றபிரகிருதிகளை துரும்பட்டை நியாயம்போல் மேலுக்குமேலடுத்து கீழுக் குக்கீழ்தள்ளவேண்டியது, ஓய்தாமரப்பூவிலுண்டானவரே விகிருதிகளுக்குஜடத்துவமும் பிர கிருதிகளுக்குசித்ரூபத்துவமும் பிரஸித்தமல்லவா ஆகையால் க - வதைத்தள்ளவும் உவதைக் கொள்ளவும்சொன்னது யுக்தந்தான் எதைச்சொல்வதில் சுருதிக்குக்கூடமவுனமோ அந்ததள ளத்தக்கனது தள்ளுகைகொள்ளத்தக்கதை கொள்கையுமத்த அரூபவஸ்துவிலொருவசனமு மில்லை அஸத்துக்கள் பிரதியோகிகளாகும்பொழுது ஸத்துக்கள்னுயோகிகளாகும் எவ்வளவு காலமனாத்மாக்கள் ஸித்திக்குமோ அவ்வளவுகாலந்தா னாத்மாக்களும்ஸித்திக்கும் எவ்விடத்தில் சுருதிக்கும் மனதுக்கும் மவுனம்ஸித்திக்குமோ அந்தஅரூபப்பிரம்மத்தினிடத்தில் ஆத்மா னாத்மாக்களான ஸத்தஸத்துக்களெல்லாம் முசல்கொம்புக்குஸமங்களாகும்பிரம்மாகாரமனோ விர்த்திபரிணமமல்லவா முக்தியைகுடுக்கத்தக்கது ஆகையாலந்தவாதத்தைத்தான் ஸகலமுமு

க்ஷுக்கனுமடுக்கவேண்டியது ஆரம்பவாதம் மந்தாதிகாரிவிஷயமாகையால் தள்ளத்தக்கது
விவர்த்தவாதம் தள்ளவும்கொள்ளவும்கூடாமையால் வியர்த்தமாகும்இவ் விவர்த்தமானதுசில
இடத்தில் அவித்தைஎன்றும் சிலஇடத்திலஞ்ஞானமென்றும் சிலஇடத்தி லத்தியாஸமென்றும்
சுருதிமுதலானதுகளில் சொல்லப்படுகின்றன, நாசமத்தகூடஸ்தாத்பாவை தேகாதிவிகாரங்க
ளிலத்தியாஸஞ்செய்துகொண்டு ஸம்ஸாரத்தில் பிரமிக்கிறார்களல்லவா ஸகலருமத்தியாஸத்
தைமுன்னிட்டுக்கொண்டே நானென்னுடையதென்று ஸகலவிஷயங்களிலுமபிமானித்தால்பிர
விருத்திக்கிறார்கள் விகாரங்களிலாத்மபுத்தியா லந்தந்தஅனாத்மதர்ம்மங்களை ஆத்மாவிடத்தி
லாரோபணம்செய்துகொண்டு அவர்கள்ஸுகதுக்கங்களை மிகவுமனுபவிக்கிறார்கள் சுருதிகுரு
ப்பிரஸாதங்களாலு மேகாந்தமனனத்தாலும் சித்ரூபாத்மஸமீபத்திலிருந்து அனாத்மாக்களை
வேர்படுத்துவானுகி லப்பொழுது ஹிரதயக்கிரந்திரூபமானஅத்தியாஸம கொஞ்சம்சிதிலமாகு
ம்அதன்றி கோடிகர்ம்மங்களைச்செய்தபோதிலுமாகாது அனாத்மாக்களை வேர்படுத்துகிரபிரகா
ரத்தையு முமக்குகிரமமாகச்சொல்லுகிறேன்கேளும் அன்வயவியதிரேகங்களால் நானிதென்
றதுகளை வேர்படுத்துவதெப்படி எனில் எப்படிதூண்சுவற்குடம்முதலான வெளிவஸ்துக்களில்
தன்னைத்தவிரவேரையாக இதென்றரியுகிறானே இப்படியுள்ப்பட்ட ஸூக்ஷ்மதேகத்திலஹங்
தையைஅடுத்துக்கொண்டு இந்தஸ்தூலதேகத்தை பஞ்சீகிருத பஞ்சபூதவிகாரமாகையா லிந்த
ஸ்தூலதேகமனாத்மா அஸத்து துச்சமென்றுதோஷதிருஷ்டியாலிதென்று பிராஞ்ஞனவன்
நிச்சயிக்கவேண்டியது பின்காரணதேகத்தி லஹந்தையைஅடுத்துக்கொண்டு ஸூக்ஷ்மதேகத்
தைஅபஞ்சீகிருதபூதவிகாரமாகையா லிந்ததேகமனாத்மா அஸத்துதுச்சமென்றுதோஷதிருஷ்
டியாலிதென்று மகாப்பிராஞ்ஞனவன் நிச்சயிக்கவேண்டியது, பின்னும்துரீயதேகத்திலஹந்
தையைஅடுத்து அஞ்ஞானகாரியாவரணமாகையா லிந்ததேகமனாத்மா அஸத்துதுச்சமென்று
காரணதேகத்தில் தோஷதிருஷ்டியாலிதென்றதிப்பிராஞ்ஞன் நிச்சயிக்கவேண்டியது பின்னும்
சின்மாத்திரமான அதேகத்தில் அகந்தையைஅடுத்து பிராரப்தகர்ம்மமாத்திரத்தாலுண்டான
துக்கஸஹிதமாகையாலிந்ததுரீயதேகம் அனாத்மாஅஸத்துதுச்ச மென்றுஸதாமுக்தனானவனி
தென்றுநிச்சயிக்கவேண்டியதுஉள்தேகங்களில்முன்னேஅகந்தைவஸித்திருக்களப்படி அடுக்க
வேணுமென்றுசொல்லலாமெனில்கேளும் தேகங்களில்தேகிகளுககு அகந்தையானது பிரித்து
ப்பாராமலல்லவா முன்ஸித்தித்திருக்கின்றன ஆகையாலதில்பிரயோஜனமில்லை எவன்நாலுதே
கங்களிலுமகந்தையைப்பிரித்து கிரமமாகஅடையிகிறானே அவன்தான் ஸம்ஸாரமுக்தனுவா
ன் மரத்தின்மேல்கொப்பைப்பிடித்து கீழ்கொப்பைவிடுகிறதுபோல் அட்டையான திரெண்டா
வதுதுரும்பைபிடித்து முன்துரும்பைவிடுகிறதுபோலும் மேலுக்குமேலுள்ளதேகத்தைப்பிடி
த்து முன்னுக்குமுன்னுள்ளதேகத்தைத் தள்ளவேண்டியது விவேகஉதயத்துக்குமுன்னத்தியா
ஸத்தைமுன்னிட்டுக்கொண்டு வியாபாரம்செய்தவன் பின்னதைபின்னிட்டுக்கொண்டு விஷயத்
தில்வியாபரிப்பான் அத்தியாஸமத்ததேகத்தா லொருவனும் வியாபரிக்கமாட்டானாகையால்
வியாபாரநிவிருத்திக்காக அத்தியாஸத்தை அவச்சியம்விடவேண்டியது விஷயங்களிலிந்திரியங்க
ளுடையவியாபாரத்தால் தேகிகளுக்கு துக்கமுண்டாகின்றன ஆகையா லதின்நிவிருத்தியானது
ஸுகத்தைநிச்சயமாகக்கொடுக்கும் குருப்பிரஸாதத்தாலும் தன்மனப்பிரஸாதத்தாலும் மூன்
றுதேகங்களிலுமுள்ள அகந்தையைக்கிளப்பி துரீயஸ்முதலான மூன்றுபாதங்களிலும் கிரமமா
கசேர்ப்பிவித்தவன் இவ்விடத்தில்தானே உடனேமுக்தனுகிறான் நான்கண்டரூபன் அனந்தசி
த்கனன் பரனுக்குப்பரன் பரிபூர்ணசேதனன் ஜனனமரணமத்தவன் நிர்ம்மலனென்றிவ்விதபா
வனையாலேயே அந்தஅகந்தையை வித்வான்கிளப்பவேண்டியது "இப்படி அப்பயதீக்ஷிதரவர்
கால் மொழிபெயற்கப்பட்ட குருஞானவாஸிஷ்டத் தத்துவஸாராயணசந்திரிகையில் ஞானகா
ண்டத்தின் க - வதுபாதத்தில் சச - வது அத்தியாயம்.



# கரு - வது அத்தியாயம்.

"பிரம்மா" அய்யாதயாஸமுத்திரானகுருவே பரமென்றும் அபரமென்றும் வித்தை
இரெண்டுவிதமாகக்கேழ்வியாகிரபடியா லதைபிரித்தெனக்குச்சொல்லவேணும்"ஸ்ரீகுருமூர்த்தி"
ஓய்தாமரைப்பூவிலுண்டானவரே பூர்வமும்முடைய அதிகாரத்திலிருந்தவர் தன்னுடையஜியேஷ்
டபுத்திரனுகிய அதர்வனுக்கு அதைச்சொன்னார் அந்தஅதர்வனும் தேவர்களுக்குமுந்தினவ
ரும் ஸகலபுவனத்துக்கும் கர்த்தாவும் இரெக்ஷகனுமான அந்தப்பிரம்மாவின்முகமாகக்கேட்டு
அந்தப்பிரம்மவித்தையை அங்கிரனுக்குச்சொன்னார் அந்தஅங்கிரனும் பரத்துவாஜருக்குச்
சொன்னார் அந்தபரத்துவாஜரும் அங்கிரஸ்ஸுக்குச்சொன்னார் அந்தஅங்கிரஸ்ஸிடத்திலொரு
க்கால் சவுனகர்போய்கேட்டார் சவுனகர் அய்யாபகவானே எதையரிந்தால் ஸகலமுமரியப்
பட்டதாகுமோ அதைச்சொல்லவேணும் "அங்கிரஸ்ஸு" பரமென்றுமபரமென்றுமிரெண்டு
வித்தைகளை அரியவேணுமென்று பிரம்மவாதிகள்சொல்லுகிறார்கள் அதிலபரவித்தையைச்
சொல்லுகிரேன்கேளும் ரிக்யஜுஸ்ஸாமமதர்வணமென்று நாலுவேதங்கள் நிருக்தமென்றதற்க
சாஸ்திரம் ஜோதிஎன்றஜோதிச்சாஸ்திரம் சந்தஸ்ஸென்றமீமாம்ஸாசாஸ்திரம் சிக்ஷைஎன்ற
வேதாந்தசாஸ்திரம் வியாகரணமென்ற சப்தசாஸ்திரம் கல்பமென்றவைத்தியசாஸ்திரம் இதுக
ளபரவித்தையாகும், இனிபரவித்தையாவது, எந்தவித்தையாலக்ஷரமும் பார்க்கக்கூடாததுமெ
டுக்கக்கூடாததும் கோத்ரம் வர்ணம் கண் காது கால் கைமுதலான அவயவங்களத்ததும் ஸர்
வவியாபகமும் மிகவும்ஸூக்ஷ்மமும் பூதங்களுக்குக்காரணமும் ஸச்சிதானந்தாத்துவைதமும்
ஆதிமத்தியமந்தங்களத்ததுமான பிரம்மத்தைதரியமுள்ளவர்கள் தானுகப்பாற்கிறார்கள் எப்
படிஎட்டுக்கால்பூச்சியானது நூல்களைஷிரிஷ்டித்து லயப்படுத்துகின்றனவோபூமியிலோஷதி
களுண்டாகிரதுகளோ எப்படிபுருஷனிடத்தில் ரோமங்களுண்டாகிரதுகளோ அப்படி இப்பிர
பஞ்சமெல்லாம் அக்ஷரமானஸத்ரூபத்திலிருந்துண்டாயித்து தவமாகின்றசித்சக்தியால் பிரம்ம
ம்விர்த்தியாகி அதிலிருந்தன்னமுண்டாயித்து அந்தஅன்னத்திலிருந்து பிராணன் மனது ஸத்
தியமுலகங்கள் கர்ம்மங்களிதுகளி லமிருதமுண்டாயிற்று சொல்லிய அன்னசப்தத்தைபிரத்
தியகாத்மாவென்றரிந்துகொள்ளும் எவன்ஸர்வஞ்ஞனே எவன்ஸர்வவித்தோ எவனுக்குஞ்ஞா
னமானதவமோ அவனிடத்திலிருந்து இந்தபிரம்மம்நாமரூபமன்னமுமுண்டாகின்றன இதிலன்
னசப்தம் தேகாதிப்பிரபஞ்சமாகும் பரத்தியக்கென்றும் பரனென்றும்சொல்லப்படுகிறதுஸத்
த்தியமாகும் இதேஸர்வகாரணம் சிஷ்யவற்கங்களான நீங்கள் ரிக்குமுதலானவேதங்களில்
சொல்லிய அக்னிஹோத்திரம்முதலான நிஷ்காமநித்தியகர்ம்மங்களைசெய்யுங்கள் அதுகளால்
சித்தசுத்தியை அடைந்து தேகாந்தத்தில் ஸூரியமண்டலத்தின்வழியாக சாசுவதப்பிரம்மலோ
கத்துக்குப்போய் அமிருதபதத்தை அடையுங்கள் ஓய்சௌனகரே வாஜபேயம்முதலான காம்மி
யகர்ம்மம் ஜன்மஹேதுவாகையால் தள்ளிப்போடவேண்டியதுதான் ஓட்டைத்தோணிக்குத்து
ல்லியமான அந்தயாகங்களில் ச.அ - ரித்தியுக்களுண்டு அக்கர்ம்மம் நிகிருஷ்டமிதைத்தானே
க்ஷேமமென்றெவர்கள் சந்தோஷிக்கிறார்களோ அவர்கள்திரும்பவும் ஜரைமரணங்களை அடை
யுவார்கள் அவித்தையின்நடுவிலிருந்துகொண்டு தானுகவேதைரியத்தை அடைந்து பண்டிதர்க
ளாகத்தங்களை எண்ணிக்கொள்ளுகிற இரோகங்களால் பிடிக்கப்படுமல்ப்பபுத்திக்காரர்கள்குரு
டனுலழைத்துக்கொண்டுபோகப்பட்ட குருடர்கள்போல் பூமியில் சுத்திவருகிறார்கள் அவித்
தையில் வெகுவிதமாகஇருந்துகொண்டு நாம்கிருதார்த்தர்களென்றபிமானிக்கிற அந்தபாலர்க
ளான கர்மிகளாத்மஞ்ஞானமத்தபடியா லாசையாலாதுரர்களாகி ஸ்வற்கலோகத்திலிருந்துநழு
வுகிறார்கள் யாகங்களையும் குளம் கிணர்கள்முதலானகர்ம்மங்களைத் தானேபெரிதாகஎண்ணி

மூடர்கள் சிரேயஸ்ஸுவேனை இருக்கென்றெண்ணுகிறார்களில்லை, செய்தகாம்மியபுண்ணியப
லத்தை ஸ்வற்கலோகத்திலனுபவித்தபின் அதிநிகிருஷ்டமான இந்தலோகத்தில் பிரவேசிக்கி
றார்கள், எவர்கள் ஸன்னியாஸியின்நடைக்குத் துல்யமானஉஞ்சவிர்த்தியைச்செய்துக்கொண்
டுதுர்ஜனங்களத்ததுன லரண்ணியத்துக்கு ஸமமானகிராமத்தில் ஞானகர்ம்மங்களைச் செய்கி
றார்களோ அந்தகிரஹஸ்தவித்வான்கள் பாபமத்து ஸூரியமண்டலவழியாக நாசமத்தஅமிரு
தபுருஷனிடத்தை அடையிகிறார்கள் பிராம்மணன் கர்ம்மத்தால் ஸம்பாதிக்கப்பட்டஉலகங்க
ளைபரிக்ஷித்துசெய்த காம்மியபுண்ணியகர்ம்மத்தால் மோக்ஷமில்லையென்றுநிச்சயித்து ஒழிச்ச
லைஅடையுவான் ஆகையால் பிரம்மஞ்ஞானநிமித்தியம் ஸமித்தை கையிலெடுத்துக்கொண்டு
பிரம்மநிஷ்டனும் சுரோத்திரியனுமானகுருவை அடையவேணும அப்பொழுதந்தவித்வானுன
குருவானவர் சமதமங்களுடன்கூடியசிஷ்யனுக்கு தானறிந்தஅக்ஷரபுருஷ தத்துவப்பிரம்மவி
த்தையை ஸத்தியமாகச்சொல்லுவார் ஆகையால் பரமாத்மாவாகின்ற காரணபரப்பிரம்மத்து
க்கும் ஸத்தியகாரியமானப் பிரத்தியகாத்மாவுக்கு மைக்கியம்ஸத்தியந்தான், எப்படிஜுவலித்
துக்கொண்டிருக்கு மக்னியிடத்தி லதின்துல்யமான அனேகப்பொரிகளுண்டாகிறதுகளோ,
அப்படிஅக்ஷரமானவஸ்துவி லனேகவிதப்பிரத்தியகாத்மாக்களுண்டாகி அதிலேயேலயிக்கிற
துகள் அந்தஅக்ஷரபுருஷன் திவியன்அமூர்தன் உள்ளும்வெளியும்வியாபித்தவன் ஜன்மமத்தவ
னபிராணமனதுகளத்தவன் வெளுமையுள்ளவன் அக்ஷரமானஓங்காரத்துக்குமதற்குப்பரனுன
பிரத்தியகாத்மாவுக்கும்பரன், இப்பரமாத்மாவுக்கக்னிதலை சந்திரஸூரியர்கள்கண்கள் திக்கு
கள்காதுகள் விஸ்தாரங்களான வேதங்கள்வாக்கு வாயுப்பிராணன் பிரபஞ்சமிருதயம் பூமிகா
ல்கள் இப்படிப்பட்டவன் ஸர்வபூதங்களுடைய அந்தராத்மாவென்றறியத்தக்கது அந்தபரப்
பிரம்மத்தின் னிதரரூபமான ஸகுணப்பிரம்மத்திலிருந்து ஆகாசம் மேகம் பூமி புருஷன்ஸ்திரீ
இந்தஜந்துகளுமுண்டாயிற்றுகள் சந்திரஸூரியர்களு மெவ்விடத்தில் ஸஞ்சரிக்கிறார்களோ
அந்தஸகுணத்திலிருந்து ரிக்யஜுஸ்ஸாமங்களென்றவேதங்களு மதுகளில்சொல்லிய தீக்ஷை
களும் யஞ்ஞங்களும் ஸகலகிரதுக்களும் தக்ஷிணைகளும் ஸம்வத்ஸரமும் யஜமானனு முலகங்
களுமிருக்குதுகள் அந்தப்பிரம்மத்தினிடத்திலிருந்து தேவர்கள் ஸாத்தியர்கள் மனுஷ்யர்கள்
பசுக்கள் பக்ஷிகள் பிராணுபானங்கள் விரீகியவைகள் தபஸ் சிரத்தை ஸத்தியம் பிரம்மசரியம்
விதி ஏழுப்பிராணங்கள் ஏழுஅர்ச்சிஸ்ஸிகள் ஏழுஸமித்துக்கள் ஏழுஹோமங்கள் இவ்வேழுல
கங்களுமுண்டாயிற்றுகள் ஒவ்வொருபிராணியுடைய இரதயகுகையி லெவ்வேழுப்பிராணங்க
ளென்றஇந்திரியங்கள் வைக்கப்பட்டிருக்கிதுகள் இந்தஅந்தராத்மாவிடத்தில் ஸமுத்திரங்கள்
நதிகளோஷதிகள்இரஸங்கள் ஸகலமுமுண்டாயித்து இந்தஹிரதயகுகையிலிருக்கின்ற ஆத்மா
வை எந்தநரனறிந்தானே அவனிந்தப்பிரபஞ்சம், தவம், கர்ம்மம், பிர்ம்மம், அமிருதமிதுகளா
கிறான்அவன்தன்னுடைய அவித்தையின்கிரந்தியை செதரச்செய்கிறான் ஆகையாலோய்சவு
னக்ரே இப்பரவித்தையை மோக்ஷத்தைச்செய்கிறதாக நீரறியும் "பிர்ம்மா" அய்யாகுருமூர்தியா
னமகாதேவரே அங்கிரஸ்ஸு சவுனகருக்குபதேசித்த முன்வாக்கியங்களிலெனக்குஸம்சயமுண்
டாகின்றனவே உபக்கிரமத்தில்சொல்லப்பட்ட அதிர்ச்சியத்துவாதிகுணமுள்ள நிற்குணபர
மாத்மாவிடத்திலக்னிதலை முதலானமாயாகுணங்களெப்படியுண்டாயித்துகள் மாயாதீதவஸ்து
வில்மாயாகுணங்களுண்டாகுமாகிலப்பொழுதொருவியவஸ்தையன்றி ஸகலமும்ஸங்கரமாகு
மே இப்படிமகாதேவர்கேட்டுசெரியான ஆக்ஷேபஞ்செய்வதில் ஸமர்தரான நாலுமுகனைச்சொ
ன்னார் ஸ்ரீகுருமூர்தி விசாரிக்கும்பொழுது பரமார்தசெதசையில்பரமாத்மா அரூபனுயிருந்த
போதிலும் வியவகாரதெசையிலிரெண்டு ரூபமுள்ளவனல்லவா அதிர்ச்சியத்துவம் முதலான
குணங்களுள்ளது ஜீவகாரணமது நிற்குணரூபம் அக்னிதலைமுதலான குணங்களுள்ளது லக
காரணமது ஸகுணரூபம் அதுகளிலிந்தமாயிகஸகுணரூபத்தை அனுவதித்து அமாயிகநிர்குண



ரூபத்தை அங்கிரஸ்ஸானவர்சவுனகருக்குச்சொன்னார். அக்னிதலைஎன்றுபக்கிரமித்து ஸர்வ
பூதாந்தராத்மாவான ஸச்சிதானந்தநிர்குணபரமாத்மாவிடத்திலுபஸம் ஹாரங்கானுகிரபடி
யாலெவ்வளவும் ஸாங்கரியதோஷத்துக்கிடமில்லை, நிலைத்தபொருளைச்சொல்லுகின்ற வேதாந்
தத்தில்நிலையத்தவசனமிருப்பதாக வொருக்காலுமெண்ணக்கூடாது மாயாமயமானஸகலமும்
காணப்படுகிறபடியால் மாயாமயமானது காணப்படாததென்று சொல்லப்பட்டுது ஆத்மா
வாகக்காணத்தக்கதாகையால் மிகவும்பாற்கத்தக்கதில்லையெனறும் சொல்லககூடாதுஇதென்
றுவதுநனென்றுவது பரமாத்மாவைப்பாற்கக்கூடாமலிருந்தபோதிலும் தானென்றுபாற்கக்
கூடியதாகையால்குத்தமில்லை சிலர்கள்பாற்கக்கூடாமைமுதலான தர்ம்மங்கள் ஸாமான்னிய
அடையாளம் காணுகிறவரூபப்பிர்ம்மத்துக்கென்றெண்ணுகிறார்களதுயுக்தமில்லை முன்பின்நன்
றுகநீர்விசாரித்துபபார்ப்பீராகிலந்த தர்மங்கள்சிரூபப்பிர்ம்மத்துக்கென்றுமக்கு புத்தியுண்டா
கும் "பிர்ம்மா" அய்யாகருணாநிதியானகுருவே இவ்வக்னிதலைமுதலானகுணங்களுள்ள வித்
தையானதுபரவித்தையா அல்லதபரவித்தையா "ஸ்ரீகுருமூர்தி" ஓய்விதியேபரவித்தையானது
ஸகுணநிர்குண பேதத்தாலிரெண்டுவிதமாகும் ஆகையாலிது பரவித்தைக்குள்ளடங்கினதே
தவிரவேரைவிதமில்லை, ஸகலாத்மாவானவிராட்டாகிய விசுவரனுடைய வித்தையாகையாலிவ்
விடத்தில் பிர்ம்மவிஷ்ணுருத்திரர்களுடைய கலகத்துக்கிடமில்லை நிர்குணப்பிம்மவித்தைக்கு
ஸமீபஸாதனமாகையாலிது பரவித்தைஎன்று பெயருடையதாயித்து எப்படிநந்திதெருசனம்
ஸித்தியாதவனுக்கு சிவதெருசனம்ஸித்தியாதோ அப்படிஸகுணவித்தயத்தவனுக்கு நிர்குண
வித்னதகிடையாது ஸச்சிதானந்தப்பிர்ம்மஸ்வரூபமுள்ளகைவல்யமுக்தியும் ஸகலமுமுக்ஷுக்
களுக்குமந்தவித்தையால்தான் ஆகையாலோய்பிர்ம்மாவே ஸகலவித்யெசுவரியான அந்தநிர்ம்
மலபரவித்தையை ஸர்வப்பிரயத்தினத்தால் நீரறிந்துகிருதார்தராகவேண்டியது இரிக்வேதம்
முதலானவபரவித்தையுமறியவேண்டியதுதான்பரவித்தைக்குஸாதனமாகையாலிரெண்டையும்
முன்னுப்பின்னுமாக வறிந்தால்தான் காரியகாரணமானமாயிக ஸகலஜகத்துமறியப்பட்டதா
கும்ஸம்சயமில்லை, இதிலுமக்ஷரத்துவஞ் சொல்லப்பட்டிருப்பதா லேகவிஞ்ஞானப்பிரதிஞ்
ஞைக்குத்தடையில்லை சப்தப்பிர்மத்தில்ஸமர்தனானவன் பரப்பிர்ம்மத்தையறியாதபக்ஷத்திலவ
னுடைய சிரமமெல்லாம்மலட்டுப்பசுவை இரெக்ஷித்தசிரமம்போலாகும் அபரவித்தைக்குப்
பரவித்தையிலவஸானமாகையால் பிர்ம்மைகவிஞ்ஞானத்தால் ஸர்வஞ்ஞானமென்றதுசித்தி
த்தது, ஒருமண்பிண்டத்தையறிந்தமாத்திரத்தில் கடம்முதலான ஸகலமும்மண்ணென்று
மண்மயமென்றுவதறியப்படுகின்றனவல்லவா ஒருலோஹமணியால் ஸகலமும்லோஹமயமெ
ன்றிவ்விததிருஷ்டாந்தங்களால் பிரதிஞ்ஞை ஸித்தித்தது ஆகையால் ஸச்சிதானந்தப்பிர்ம்மத்
தையறிந்தமாத்திரத்தில் தடையத்தகைவல்லியங்கிடைக்கிறபடியாலறிந்தவனுக்கு ஸர்வஞ்ஞத்
துவம்நிலைத்தது "இப்படிஅப்பயதீக்ஷிதரவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட குருஞ்ஞானவா
ஸிஷ்டத்துவஸாராயணசத்திரிகையில் ஞானகாண்டத்தின் - க - வதுபாதத்தில் - சரு - வது
அத்தியாயம் முற்றிற்று.

## கசு - வது அத்தியாயம்.

"பிர்ம்மா" ஸ்வாமிவேதாந்ததத்துவஞ்ஞரே ஸிரிஷ்டிக்குமுன்னாத்மா வொருவனே
ஆனனென்றுதொடங்கி உலகங்களையவனே பார்த்தானென்றும் பிரஞ்ஞைபிரதிஷ்டை பிரஞ்
ஞானம்பிர்ம்மமென்று மந்தத்தில்சொல்லுகின்ற ஐதரேயிகளுடையவாக்கியங்களிலுமெனக்கு
ஸம்சயமிருக்கின்றன என்னவெனில் ஆரம்பத்தில் சொல்லிய ஆத்மாஸகுணனு அல்லது
நிர்குணனு அல்லது பயாதீதனு அல்லது பயரூபியா உபஸம்ஹாரத்தில்நிர்குணம் சேழ்வியா

கியபடியால் - க - வதுமில்லை உலகம்முதலானதைப்பார்த்ததாகச் சொல்லப்பட்டிருப்பதால்
உ - வதுமில்லை ஸர்வதர்ம்மமுமத்தபடியால் - ௩ - வதுமில்லை, விரோதிகளுக்குச்சேர்கை
கூடாமையால் - ச - வதுமில்லை இப்படிஸம்சயப்பட்டென்மனம் பிரமிக்கின்றன என்னிடத்
திலதங்களுக்குக்கருணை இருக்குமாகில் ஸம்சயமத்தவனாக என்னைச்செய்யவேணுமென்றிப்
படிகேட்டு ஸர்வஸம்சயச்சேதகரானமகதேவர் ஸகலவேதாந்த நிதியாகையால் சீக்கிரத்தில்
பிர்ம்மாவைப்பார்த்துச்சொன்னார் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்பிர்மாவேமூன்றுவிகல்பங்களிலும்
நீர்சொல்லியகுத்தங்களுள்ளதுதான்-ச-வதில்மாத்திரம்குத்தமில்லை அதெப்படிஎனில்கேளும்
ஸத்யோமுக்திஎன்றும் கிரமமுக்திஎன்றுமிரெண்டுவிதமுக்திகளும் சாஸ்திரங்களில்சொல்லப்
படுகிறதல்லவா அதில்ஸத்யோமுக்திப்பிரயோஜனமுள்ள சாஸ்திரத்திலுபயரூபத்துவம் விரு
த்தந்தான் அப்படியிருந்தபோதிலும் கிரமமுக்திப்பிரயோஜனமுள்ள அந்தஐதரேயஉபனிஷத்
சாஸ்திரத்தில் ஸமுச்சயார்த்தத்தையறிவுகிறவனுக் கொருவிதத்திலுமதுவிருத்தமில்லை, கை
இல்லைவாங்குகிறான் காலில்லைஓடுகிறான் என்றிப்படிப்பட்ட இதரசுருதிசப்தங்களுமிவ்வாத்மா
வுக்குபயரூபத்தைச்சொல்லுகிறதுகள் உபயாத்மாவுக் கேகத்துவமுமேகனுக்குப்யாத்மத்துவ
முமதிகாரானுஸாரமாகச் சொல்லலாமல்லவா, ஆகையாலுபயாத்மாவுக்கேகத்துவவசனம்
யுக்தந்தான் கிரமமுக்தியதிகாரியின்பொருட்டு விபாகஞ்செய்கிறதுசிதமல்ல, உபக்கிரமத்தில்
ஸகுணமாகவும் உபஸம்ஹாரத்தில் நிர்குணமாகவுமிருக்கட்டுமேஎனில் ஏகவாக்கியத்துவத்து
க்குவிரோதப்படுகிறபடியாலதுகூடாது, எவனுக்குஜகத்காரணத்துவமும் ஜீவகாரணத்துவமு
ம்ஸர்வாத்மத்துவமும்தன்னால் ஸித்திக்கின்றனவோ அவனேஉபயாத்மகன்சுருதிமுதலானது
களில் சொல்லப்பட்டமாயாசக்தியாலுண்டானகுணங்களும் வித்யாசக்தியாலுண்டான குணங்
களுமெவனுக்கோ அவனேஉபயாத்மகன் எவனையறிந்தால்போக மோக்ஷமிரெண்டையுமிச்சி
க்கின்றவர்களுக்கதிகார பதம்கிடைக்குமோ அவனேஉபயாத்மகன் ஜன்மாதிகாரணத்துவம்
முதலானதடஸ்தலக்ஷணங்களுடனும் ஸ்வகெதஸத்வாதிகளுடனும் கூடியதை உபயாத்மாவாக
ச்சங்கிக்கக்கூடாது,எப்படிசமூத்துமுதலான அவயவங்களாலும் கருப்புமுதலானவர்ணங்களா
லுமொருகடமேகாணப்படுகின்றனவோ அப்படிமுன்சொல்லிய இரெண்டுவிதலக்ஷணங்காளா
லுமறியத்தக்தனிர்குண ஆத்மாவொருவனே சிலர்கள்தடஸ்தலக்ஷணமுள்ளதுஸகுணமென்று
ம்ஸ்வரூபலக்ஷணமுள்ளதுநிர்குணமென்றும்சொல்லுகிறார்கள். ஜன்மாதிகாரணமும்மோக்ஷா
ந்தமறியத்தக்கதும் ஸத்தியாதிலக்ஷணமுள்ளதுமான பிர்ம்மமே கேழ்வியாகிறபடியாலதுயுக்த
மில்லை,ஆனலிலக்ஷணமத்ததும் குறிப்பிடக்கூடாததும்வாக்குமனதுகளுக் கெட்டாததுமான
வொருவஸ்துகேழ்வியாகின்றன அப்படி இருந்தபோதிலுமிந்த தேகத்திலதில்லைகாரணத்துவ
மீக்ஷிதிருத்துவம்முதலானதுகளும ஸத்தியஞ்ஞானதிகளுமான லக்ஷணங்களுள்ள நிர்குணப்
பிர்ம்மமே ஸகுணத்துக்குமேற்பட்டப்பிரஞ்ஞானமென்று சொல்லப்படுகின்றன அவித்தை
யின்னுபாதியால்ஜீவத்துவத்தையடைந்த அந்தப்பிர்ம்மத்துக்கும்பெயாகளாவது மனதுபுக்தி
ஹிரதயம் ஞானம் விஞ்ஞானம் பாஞ்ஞானம் ஸ்ம்ஞானம் மேதை திருஷ்டி திருதி மதி ஜ-ரதி
மனீஷை ஸங்கல்பம் கிரது காமம் அவசன் அஸு இந்தநாமங்களதுக்கு வியஷ்டித்துவத்தி
லாச்சுதுகள் பிர்ம்மாவிஷ்ணுருத்திரன் தேவேந்திரன் இதரதேவதைகளான சந்திரன் ஸூரிய
ன்அக்கினிஇந்தநாமங்களதுக்கு ஸமஷ்டித்துவத்தி லாச்சுதுகள் ஸமஷ்டிவியஷ்டிரூபர்களான
ஜீவேசர்களுக்குமேல் பூர்ணநிற்குணஸச்சிதானந்த பிர்ம்மத்தினிடத்திலிருக்கின்ற அந்தஜீவே
சர்கள்மாயையாலுமவித்தையாலுமாபாஸர்களாகி உலகத்தையும்ஸம் ஸாரத்தையும் ஸிரிஷ்டிக்
கிறார்கள் அவர்களுக்காபாஸத்துவம்ஸமமாயிருந்தபோதிலுமீசன் பிர்ம்மஞ்ஞானியாகையால்
நியந்தாவானன் ஜீவன்பிர்மஞ்ஞானமத்தவனைகையால்நியம்மியனனன் எந்தஜீவன்தனக்கீசுவர
நியம்மியத்துவத்தைத்தள்ளி பிர்ம்மநியம்மியத்துவத்தை யொப்புக்கொள்ளுகிறானே அவ



னேஉத்தமன் இஹபரஸகலலோகபோகவைராக்கிய ஸம்பத்தெப்பொழுதடையப்பட்டுதோ
அப்பொழுதுதானீசுவரநியம்மியத்துவம் தள்ளப்படும் சுத்தாந்தக்கரணமுள்ள எவனுக்குமன
தில்வைராக்கியமுண்டாயித்தோ. அவனுக்கும்மால் விஷ்ணுவாலென்னால்தானகவேண்டிய
காரியமென்ன இருக்கின்றன மூன்றீசர்களையும் திரிணம்போலெண்ணி நிஷ்காமனாகிதன்னாத்
மாவையும் பெரிதாகச்செய்த புருஷோத்தமனே என்பிரபுவாக எப்பொழுதுமெண்ணுகிறேன்
கல்மஷமத்தவைராக்கியம் மாத்திரம்பூமியில் ஸித்திக்குமாகிலவனுக்கு முக்திகையிலிருக்கின்
றனசந்தேகமில்லை "பிர்ம்மா" அய்யாபிரபுவே உலகத்தில்சிலர்கள் ஜீவேசர்களென்ற பெய
ருள்ளநிர்குணப்பிர்ம்மந்தானேமாயை அவித்தையுடன்கூடி ஜகத்ஸம்ஸாரங்களை ஸிரிஷ்டிக்கி
ன்றனவென்றுசொல்லுகிறார்கள் சிலர்கள்பிர்ம்மத்துடன் கூடினஜீவேசர்கள்மாயை அவித்தை
களால்ஸிரிஷ்டிககிறார்களென்று சொல்லுகிறார்களிந்தபக்ஷங்களிலெது முக்கியமாகும்சொல்ல
வேணும "ஸ்ரீகுருமூர்த்தி" ஜீவேசர்களுக்குப்பெயர்மாத்தி ரம்ஸித்திக்கிறபடியால்முதல்பக்ஷம்
கவுணமாகும் ஒருவஸ்துவும் உருவமன்றிபெயருடன்கூடாது சித்ரூபமுமிதரரூபத்தை யடை
யாமல்ஸிரிஷ்டிக்கமாட்டாபிரகிருதத்தில்ஜீவேசுவரர்களுடைய ஸிரிஷ்டியைச்சொல்லவுமில்லை
ஜீவேசர்களாபாஸரூபிகளானபோதிலுமரூபிகளாயாவது சித்ரூபிகளாயாவதெவ்விதத்திலுமா
கமாட்டார்கள் இரெண்டுவித பரமார்த்தசையில்வர்களரூபிகளாகவும் சித்ரூபிகளாகவுமான
போதிலுமிந்தவியவஹார தெசையிலாகாததுனல்குத்தமில்லை, அரூபத்தையபேக்ஷித்து சித்ரூ
பம்வியாவஹாரிகமானபோதிலுமாபாஸத்தை யபேக்ஷித்துபாரமார்திகமல்லவா ஆகையாலரூ
பம்சித்ரூபமிரெண்டும் ஸத்தியமென்று நிச்சயித்துக்கொள்ளும் மாயிகமாவித்யகமிரெண்டுரூப
மும்ஸத்தியமல்ல, ஜீவனஸ்வதந்திரனகையால் ஸிரிஷ்டிகர்தாவாகமாட்டானென்றும்சொல்லக்
கூடாது உலகஸிரிஷ்டியில் ஸ்வாதந்திரியமத்தபோதிலுமாந்தர வஸ்துக்களின் ஸிரிஷ்டியில்
ஸ்வாதந்திரியமிருக்கின்றனவல்லவா கரத்திருத்துவாதியேஸம்ஸாரமெனி லீசனுக்கும்பிர்ம்
மத்துக்கும் ஸம்ஸாரம்நேரிடுமென்றதுயுக்தமில்லை, ஜீவனீசன்பிர்ம்மமிம்மூன்று பெயர்களுக்
கும்கர்த்திருத்துவமிருந்தபோதிலும் ஜீவனுக்கு ஸத்தியகர்த்திருத்துவமாகையாலு மீசனுக்கு
ப்பிராதிபாஸிககர்த்திருத்துவமாகையாலும் பிர்ம்மத்துக்கு வியாவஹாரிககர்த்திருத்துவமா
கையாலும்ஸம்ஸாரமானது ஜீவனுக்குமுக்கியம் ஈசனுக்குகவுணம் பிர்ம்மத்துக்கு கெந்தமாத்
திரம்கூட இல்லை, பிர்ம்மத்துக்கீக்ஷிதிருத்துவமானது சித்தின்விலாஸமல்லவா ஆகையாலது
க்குஸம்ஸாரமில்லை சொல்லிய பரமாத்மாவுக்கு கீழ்மேல்பின்முன்தென்வடலெங்கும்நானே
இருக்கிறேனென்றும் நானொருவனே முன்னானேனென்றுமகங்காராதேசம் காணப்பட்டபோ
திலுமாகாசம்போல் ஸர்வவியாபகனென்று சொல்லியபடியால் ஸகலஸம்ஸாரப்பஞ்சமலைக
கக்கினியாக இருப்பதாலும் ஸம்ஸாரமில்லை ஜாட்டியகெந்தங்கூட இல்லாமல்ஸவயம்பிரகாச
னனிற்லேப ஆத்மாவுக்கீக்ஷிதிருத்துவாதிதர்ம்மங்களால் சொல்லப்படுமாகிலப்பொழுதசுத்
தஸ்தலஸ்பர்சத்தால் வாயுஸூரிய அக்னிகளுக்குமசுத்திசொல்ல இடம்நேரிடுமே ஆகையால்
பரமாத்மாவொருக்காலும் ஸம்ஸாரியாகமாட்டான்நிச்சயம் நிஷ்களன் நிர்மலன் நித்தியன்
நிர்குணன் நிச்சலன் விபு அஜன் அமரன் அகிலாதாரன் ஸ்வயம்பிரபன் நிஷ்கிரியன் நிர்பயன்
அனந்தன் நிர்துவயன் பூரணசேதனன் அசரீரன் நிராகாரன் அகரணன் நிரஞ்சனனென்றிவ்
விதசப்தங்களால சுருதியில்கோஷிக்கப்படுகிறவனுக்கு ஸம்ஸ்ாரவார்த்தைதானெப்படிகூடும்
ஜீவன்ஸம்ஸாரதுக்கத்தை இடைவிடாமலனுபவித்து தைவத்தினலும்புண்ணியத்தினலுமனே
கஜன்மங்களாலும் மனதிஉபரதியைஅடையுவான், அதனல் கிரமமாக நித்தியசுத்தபுத்தமுக்த
ஸ்வரூபத்திலிருந்துகொண்டு ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான், ஜீவனுக்கவித்தையாலுண்
டான தேகித்துவமானது வேதாந்தவித்தையால்நீங்கும் ஈசனுக்குமாயையாலுண்டான தேகித்
துவமானது தன்னதிகாராவஸானகாலத்தில்நீங்கும் பிரம்மத்துக்கு தேகித்துவமானதுமாயை

னலா அல்லது அவித்தைனலா அல்லது வித்தைனலாவென் றெவனுவதொருமந்தன் கேழ்ப்
பானுகிலவனுக்கு தண்டாபூபிகாயியாயத்தால் சொல்லவேண்டியது, அப்பொழுதவனு மசரீர
ஸத்ரூபாத்மாவை அரியுவான் ஓய்சதுர்முகரே ஆத்மாவுக்கசரீரத்துவம் பிரஸித்தமல்லவாசித்
தேதேகமென்று ரூபகவியுத்பத்தியால் தேகமத்தபடியால் சித்தேகனென்றதிலும் குத்தமில்லை
"இப்படிஅப்பயதீக்ஷிதரவர்களால்மொழிபெயற்கப்பட்ட குருஞ்ஞானவாஸிஷ்டத்தின்தத்துவ
ஸாராயணசந்திரிகையில் ஞானகாண்டத்தின்௧-வதுபாதத்தில௧௬-வது அத்தியாயம்முற்றிற்று.

## ௧௭-வது அத்தியாயம்.



"பிர்ம்மா" இந்தஆத்மா அணுவா அல்லது மஹத்தாஅல்லது பயரூபியா சுருதியி
லவகாசமிருப்பதாலிப்படி மூன்றுவிகல்பஞ்செய்ததுயுக்தந்தான் அணுவென்றுஸ்தாபித்தால
மஹத்துவசுருதிக்குவிரோதம்வரும் மஹத்துவத்தைஸ்தாபித்தாலணுத்துவசுருதிக்கு விரோ
தம்வரும் இரெண்டையும் ஸ்தாபித்தா லஸம்பவதோஷம்வரும் பெந்தமோக்ஷங்களையடுத்தகா
லத்துவயமுமாவித்தியகமாகையால் காலபேதத்தாலாவது தேசபேதத்தாலாவது விருத்ததர்ம்
மங்களுக்கவகாசம் சொல்லக்கூடாது ஸத்தானஆத்மாவுக்கா வித்தியககாலத்தா லெப்படிபே
தம்வரும் அப்படிவருமாகில் முசல்கொம்புனல் மகாமேருவும் பேதிக்கப்படும் ஹிரதயம்முத
லானஇடங்களி லணுவாகக்காணப்படுகிறதுக்கு மவித்தைதான்காரணம் புத்தியுமவித்தையின்
காரியமாகையால் புத்திகுணஸாரத்தா லணுத்துவமென்றும் சொல்லக்கூடாது வியவஹார
தெசையிலிருப்பதாலணுத்துவ முபசரிக்கப்படுமேயன்றி வாஸ்தவமாகமாட்டா, மஹத்துவ
மானது ஸர்வவேதாந்தஸித்தமாகையால் வாஸ்தவமென்றும் காலத்திரயாபாத்தியமாகையால்
நித்தியமென்றும்சொல்லலாம், இந்ததேகத்தில் புத்தியின்பிரவேசத்தா லாத்மாவும் பிரவேசி
க்கிறதாக அவிவேகிகள் சொல்வதும் குற்றமில்லை, தேகத்திலுண்டாகின்ற ஸுகதுக்கங்களும்
புத்திக்குத்தான் ஆத்மாவுக்கு குடைக்காரன்நியாயமாக உபசரிக்கப்படுகின்றன ஆத்மாகேவ
லன் சாந்தன் நிற்குணன் நிரஞ்சனன் அகண்டஸச்சிதானந்தலக்ஷணங்களுள்ளவன் பூர்ணசே
தனன் நித்தியசுத்தன் நித்தியபுத்தன் நித்தியமுக்தனென்று சொல்லப்படுகிறானல்லவா அவனு
க்கணுத்துவம் முதலானதர்ம்மங்களை எப்படிசொல்லலாம் "ஸ்ரீகுருமூர்த்தி" ஓய்பிரம்மாவே
உம்முடையபிராந்தியை என்னசொல்வேன் புத்திக்குப்பிரவேசத்தில் நீர்சொல்லியஹேதுசரி
இல்லை, எப்படிஎனில்கேளும், சேதனாத்மா ஸர்வவியாபகனாகையா லவனுடையஸன்னிதியி
லணுவானபுத்தி எப்படிஇருக்கும் அஸர்வவியாபகனும் தேகத்தில்பரிச்சின்னனும்ஹிரதயத்தி
லிருக்கிறவனும் ஆத்மாவின்னம்சனுமாயிருக்கின்ற பிரத்தியகாத்மாவென்றவனுடைய ஸன்னி
தியில் புத்திஇருக்கும் வியஷ்டிஸாக்ஷியும் சித்தின்னம்சமுமான இந்தஆத்மாவுக்கணுத்துவம்
தன்னாலேயே ஸித்தித்திருக்கின்றன, அக்னியிடத்தில் பொரிகளுக்குப்போ லுத்பத்தியும் ஸித்
தித்தது, புத்திப்பிரதிபிம்பனானஜீவாத்மா தேகத்தில்பிரவேசித்து ஸுகதுக்கங்களை யனுபவிக்
கிறபடியால் ஸாக்ஷியு மனுப்பிரவேசம்செய்தவனும் பிம்பனுமான பிரத்தியகாத்மாவுக்கு ஸுக
துக்கங்களில்லை, புத்தியானதசேதனமாகையா லதற்குபிரவேசமாவது ஸுகதுக்கங்களாவது
யாதொன்றுமில்லை, அக்னியில்தபித்த அயப்பிண்டம்போல் பிரதிபிம்பஜீவனுடைய ஸஹவா
ஸத்தால் பிம்பனனஸாக்ஷிக்கும் ஸுகதுக்கங்களுபசரிக்கப்படும், இப்படியிருக்கபிம்பப்பிரதி
பிம்பங்களுக்கன்னியனான ஸர்வவியாபகநிச்சல பரமாத்மாவுக்கெப்படி ஸஹவாஸத்தை நீர்
சொல்லலாம், இச்சேதனாத்மா ஸ்வதந்திரனாகையால் புத்திமுதலான பரதந்திரனல்ல, இவனு
க்குத்தன்குணஸாரத்தாலேயே அணுத்துவம்வந்துதேயன்றி புத்தியால்வந்ததில்லை, வண்டியா



ரைக்கால்னுணிபோல் ஸூக்ஷ்மனென்றுசொல்லிய ஆகாரமும் புத்தியாலும் தன்னாலும்வந்த
தென்று சுருதியில்சொன்னது விவேகி அவிவேகிகள்விஷயமாக ஸார்தகந்தான், பிரதிபிம்பத்
திலுள்ள அணுத்துவந்தான் புத்தியுபாதியால்வந்ததேதவிர பிம்பத்திலுள்ள அணுத்துவம் தன்
னால்வந்தபடியால் வாஸ்தவந்தான் வஸ்துவின்ஸம்பந்தமுள்ளது வாஸ்தவமென்று வியுத்பத்தி
யால் பிம்பமானப்பிரத்தியகாத்மாவின்னணுத்துவம் ஸத்தியமாயிருக்க அதைஎப்படிஅஸத்
தியமென்று சொல்லலா: அம்சத்துக்குவியவஹாரத்தி லெப்படியணுத்துவம்ஸத்தியமோ அப்
படியம்சிக்கு பரமார்தத்தில் மஹத்துவம்ஸத்தியந்தான் ஜீவனென்றஅம்சனுக்கு மோக்ஷஸம
யத்தில் மஹத்துவம்கிடைத்தபோதிலுமிப்பெந்தஸமயத்திலணுத்துவம்தடையத்துசித்திக்கும்
ஹிரதயகுகையில் பிரவேசிக்கிறதற்கு முன்னாத்மாவுக்ககண்டத்துவமிருந்தபோதிலும் பிரவே
சித்தபின் கண்டத்துவம் சித்தித்தது, அப்படி இல்லாதபக்ஷத்தில் கெதி இல்லை பிரத்தியகாத்ம
பரமாத்மாக்களுக்கு அம்சாம் சித்துவ விபாகமும் தன்வித்யாசக்தியால் வந்ததே தவிர அவித்
தையால் வந்ததில்லை என்று நிச்சயிக்கத்தக்கது. ஓய் விதியே இவ்வியவஹார தெசையில் வித்
தையால் கல்பிக்கப்பட்ட ஸகலமுமிருப்பதால் முசல்கொம்புதிருஷ்டாந்தம்சொல்லக்கூடாது.
பரமார்த்ததெசையில் சொல்லப்பட்ட அந்த திருஷ்டாந்தத்தை வியவஹாரதெசையிலும் சொ
ன்னால் மெத்த கஷ்டம் வியாவஹாரிகபேதத்தையொப்புக்கொள்ளாவிட்டாலீசன்செய்தஆனை
யைக்கடந்தபடியால் பெரிதானபயமுண்டாகும். அஸத்துக்கு ஸத்தையுண்டாகில்வியவஹார
ம் ஸத்தியமாகுமப்பொழுதவ்வியவஹாரியமென்றவஸ்து ஸித்திக்கவில்லை என்று சொல்வீரா
கில் கேளும். ஸத்தியத்துக்கே ஸத்தையுண்டேதவிர மைத்ததுக்கில்லை என்ற நியமமில்லை, அ
ஸத்தியமானஸர்பத்திற்கும் பழுதையில் ஸத்தைக்காணப்படுகிறதல்லவா, இரஜ்ஜுஸர்ப்பத்தின்
ஸத்தையைஎவன்பார்த்தவனென்று கேழ்ப்பீரோ, இரஜ்ஜுஸ்வரூபந்தெரியாதவனென்று நிச்
சயித்துக்கொள்ளும், ஆகையால் தத்துவவித்துக்கள்ளஸத்துக்கும் ஸத்தையுண்டென்றுசொல்
லவேண்டியது, அப்படிச்சொல்லாதவரை வியவஹாரத்துக்கொருக்காலுமிடமில்லை, அஸ்த்து
க்கு ஸத்தையுண்டாகிலப்பொழுது ஸத்துக்கஸத்தை வருமப்பொழுதத்தியாஸரூபமான ஸம்
ஸாரம் நேரிடுமெனில் காரியகாரணரூபத்தால் ஸத்தைஇரெண்டாகச்சொல்லப்படுகிறபடியால்
ஸத்தஸத்திரெண்டுக்கும் ஸத்தையே யுக்தமாகும், ஸத்காரணத்தில் வியவஹாரசத்தைசொல்ல
ப்பட்டுதாகிலாவதஸத்காரியத்தில் பரமார்தஸத்தைசொல்லப்பட்டுதாகிலாவதப் பொழுதத்தி
யாஸரூபமானஸம்ஸாரம் நேரிடும், இவ்விடத்திலப்படிச்சொல்லவில்லையே, ஸத்தில் ஸத்தியஸத
தையுமஸத்தில வியவஹாரஸத்தையுமல்லவா சொல்லப்பட்டுது, ஸத்தின் தர்ம்மம்ஸத்தைஅஸ
த்தின்தர்ம்மமஸத்தை இப்படி இருக்க இரெண்டுக்குமெப்படி ஸத்தைச்சொல்லலாமெனில்கே
ளும், உத்பத்திக்குமுன்காரியமஸத்தான போதிலுமிப்பொழுதுஸத்தாகையால் ஸத்தைகூடும்,
பொய்யானஸத்தையையொப்புக்கொண்டபடியால்ஸத்காரியவாதக்குத்தமும்வராதுகாரியகார
ணங்களுக்குசேஷசேஷித்துவம் காணப்பட்டிருப்பதால்சேஷியானஆத்மாவைக்காரணமாகவு
ம்ஸத்கனமாகவுமரியும், அஸத்தானதுஸத்தின் சேஷமேதவிரஸத்தானதஸத்தின்சேஷமில்லாத
படியால்ஸத்துஸர்வசேஷியாகும்இரஜ்ஜுவில்ஸர்ப புத்திபோல்சேஷாத்தியாஸம்ஊஷரபூமியி
ல்ஜலபுத்திபோல்சேஷியத்தியாஸம்வேண்டிய இரஜ்ஜுவில்வேண்டாதஸர்ப்பமாரோபிக்கப்படு
கின்றனவேண்டாதஊஷரத்தில்வேண்டிய ஜலமாரோபிக்கப்படுகின்றனவாகையால்பேதம்சே
ஷியிடத்தில்சேஷத்துவத்தையும்சேஷனிடத்தில் சேஷித்துவத்தையும்விட்டெவன்சேஷிக்கிறா
னோஅவனேஸர்வசேஷியாவான் இரஜ்ஜுவிலுமூஷரபூமியிலும் ஸர்ப்பஜலாத்தியாஸகர்தாவா
னபுருஷனொருவனாரோபிக்கப்பட்டதையும்அதிஷ்டானத்தையும் தவிரவேஸாஸித்தித்ததுபோல
சேஷாத்தியாஸம்சேஷியத்தியாஸ மிரெண்டுக்கும்கர்தாவொருவன்வேறாஸித்திக்கின்றான் இப்
படியாகும்பொழுதுசித்ஜடங்களானஆத்மதேகங்களுக்கன்னியனான சேஷனென்றசிதாபாஸன

கியஅத்தியாஸகர்தனிவ்விடத்தில் ஸித்திக்கிரான் சேஷிக்குப்பரமார்தமாக மஹத்துவமும் சே
ஷத்துக்குவியவஹாரமாகவணுத்துவமும் ஸித்தித்தது. அணுவுக்குமஹத்து சேஷமில்லாவிட்
டாலும்மஹத்துக்கணுசேஷமாகையாலணுத்துவ மஸத்தியமாயித்தெனில் மஹத்துக்கணுசே
ஷத்துவமில்லாத ஹேதுமாத்திரத்தாலணுவுக்கஸத்தியத்துவம் சொல்லக்கூடாதேதெனில் வா
ல்னுணிபோலென்றசுருதியிலனந்தத்துவம் காணப்படுகிறதல்லவா தன்னுலாவதுபாதியாலாவ
தாதமாஹிரதயத்திலணுவாயிருப்பானுசிலப்பொழுதுகாலில்முள்ளுத்தெய்ப்புனுலுண்டாகிறவி
யதையைஅரியாமலிருக்கவேணுமெனிலெப்படிப பிரகாசமும்கெந்தமும் அக்னியிலும் பூவிலு
மிருந்தபோதிலும்மைத்த இடத்திலும் வியாபிக்கின்றனவோ அப்படிதுவக்கிந்திரியவழியாலா
த்மாவியாபித்திருப்பதால் குத்தமில்லை ஆத்மாஹிரதயத்திலிருந்தபோதிலும் சைதன்னியகுண
முள்ளவனுகையால் குணங்களால் தலைமுதல்பாதம்வரை வியாபிப்பதுயுக்தந்தான் ஆனல்
சைதன்னியமென்ற குணம்குணியான ஆத்மாவைத்தவிரவேரில்லாததுனல் வியாப்தியிலணு
வாகாது திருஷ்டாந்தத்தில் குணியைத்தவிரகுணம்வேளாயாயிருப்பதால் திருஷ்டாந்தவியபி
சாரமாகுமெனில் மாம்ஸபிண்டரூபமான ஹிரதயத்தைத்தவிர மைத்தவிடத்திலாமாவுக்கிருப்
பில்தாத்துனல் குணத்தைத்தவிர குணிவேளாதான், குணமும்சபளமசபளமென்றிரெண்டு
விதமூண்டு அதில்சைதன்னியரூபியான சபளகுணத்துக்குத்தான் துவக்கிந்திரியவழியாகவி
யாப்தியுண்டு ஞானஸ்வரூபியானகுணியுடைய அசபளகுணமானது ஹிரதயத்திலுள்ள ஆத்மா
விடத்திலேயே இருப்பதால் வியாபகமாகாது, இப்படியாகும்பொழுது திருஷ்டாந்தவியபிசா
ரமில்லாதபடியால் குணியிடத்திலும் சிலகுணத்தாலன்னியத்துவமும் சிலகுணத்தாலனன்னி
யத்துவமுமிருக்கிரதென்று நிச்சயம்செய்யும் குணத்தைத்தவிரகுணிவேரையாயிருப்பானுகில
ப்பொழுதுநரன்கொம்புபோல குணியசவான் ஆகையாலாத்மாவுக்குசித்குணித்துவம் நித்திய
மாகவே இருக்கின்றனவென்று தீர்மானித்துக்கொள்ளும் குணங்களாலேயேகுணியை அரிய
த்தக்கதாயிருப்பதாலாத்மாவை ஸத்தியாதிகுணங்களுள்ளவனுகவே நிச்சயித்துக்கொள்ளும்
ஸத்குணத்துக்ககுணத்துவமும் துர்குணமத்தபடியால் வேதாந்தங்களால் சொல்லப்படுகின்
றனவென்று நிச்சயித்துக்கொள்ளும் மாயாகுணங்களுமவித்யாகுணங்களுமே துர்குணங்களெ
ன்றுகேழ்வியாகிறப்படியாலதுகளுக் கன்னியங்களானஸத்தைமுதலான குணங்களகுணங்களெ
ன்றுசொல்லப்படுகின்றன அதுபசாரமென்றெண்ணக்கூடாது எப்படிஅக்னியிலுஷ்ணமானது
பசாரமாக ஸித்தித்ததல்லவோ அப்படியரியத்தக்கது இந்தஅகுணத்துவமானது தன்னுலுமனு
பவத்தாலும் ஸத்தையுடன்கூடியிருப்பதால் நரன்கொம்புபோல் துர்குணமத்ததேயாகுமென்
றுசொல்லக்கூடாது, எங்கும்ஸத்தியானந்தரூபியாகவிளங்குகிறவனுக்குகுணமுள்ள எவனல்
தாணஸத்துவம்சொல்லக்கூடும் பானமென்றது பிரகாசம் தன்பானத்தால் தன்பானம்பிரகாசி
க்கின்றனவேதவிர வேரையில்லை, வேளைபானத்தால் பிரகாசிக்கப்படுமோகிலதபானமேயன்றி
பானமாகாது, அபானத்தால் சூழ்ப்பட்டபானம் பிரகாசியாமலிருந்தபோதிலுமபானத்தாலொ
ருக்காலும்பிரகாசிக்கமாட்டா அபானமானதுபானத்தைக்கெடுக்கிற சக்திமாத்திரமுள்ளதே
யன்றிவிர்திசெய்கிற சக்தியுள்ளதல்லவென்றுகருத்து பானத்தாலேயே அபானத்துக்குபானு
பானங்கள் ஸித்திக்கிறபடியால் நாலுதிக்கிலும் விளங்குகின்ற அந்தபானமேமுக்கியமாகும்,
இப்பிரத்தியகாத்மாவுக்குபானரூபத்துவமானது பிரகாசிக்கிறபடியாலல்லவா சுருதியில்சொ
ல்லப்பட்டிருக்கின்றன ஆகையால் அபானத்தாலொருக்காலும்பானத்துக்கு ஹானிநேரிடாது
ஓய்விதியேஹிரதயத்திலெப்பொழுதும் தீபம்போல்விளங்குகின்ற ஆத்மாவையரிந்த பான
லுமதின் காரியத்திலுமத்தியாஸத்தைவிட்டுவிடும் "இப்படி அப்பயதீக்ஷிதரால் மொழிபெர்
க்கபட்ட குருஞ்ஞானவாஸிஷ்டஞ்ஞானகாண்டத்தில்-கஎ-வது அத்தியாயம் முற்றிற்று.



# கஅ-வது அத்தியாயம்.

"பிரம்மா" அய்யாபிரபுவே ஸத்தானப்பிரம்மத்தைத்தவிர மைத்தஜீவேசாதிவிகா
ரங்களுக்கல்லவா சுருதிகளிலுத்பத்திமுதலானதுகள் கேழ்வியாகிரதுகள் அந்தவிகாரங்களனு
திகளென்றும் வெகுவிடத்தில் கேழ்வியாகின்றன இப்படி இரண்டுவிதச்சொல்லுக்க ளொன்
றுக்கொன்று விருத்தமாகுமேபஞ்சீகிருதமஹாபூதஸமூகமானதேகாதிப்பிரபஞ்சத்துக்குஸந்த
திகரணுகிரபடியால்ஜன்மமுண்டேயன்றி அபஞ்சீகிருதஸூக்ஷ்மகாரணஅவ்வியாகிருததத்துவந்
தங்களுக்கு ஸந்ததிகாணுத்துனலனுதித்துவமேசொல்லவேணும்ஜீவனத்ததேகத்துக்கல்லவா
நாசம்சுருதியில்சொல்லப்பட்டிருக்கின்றன ஜீவனுக்குமரணமில்லைஎன்றவசனம் ஸ்பஷ்டமாக
வேஇருக்கின்றன ஜன்மமரணவியபதேசம் தேகத்துக்கேயன்றி ஜீவாதிகளுக்கில்லைஎன்றன
வருமரிந்திருக்கிரார்கள் ஆகையால் ஜீவன்முதலானதுகளுக் கனுதித்துவமேஸித்தித்தது, இத
னுல் பிரம்மத்துக்குப்போல் நித்தியத்துவத்தை எண்ணக்கூடாது, அந்தமொப்புக்கொள்ளப்
படுகிரதல்லவா ஜீவாதிவிகாரங்களுக்கு தேகமரணகாலத்தில் மரணமில்லைஎன்றுமட்டும்சொ
ன்னதேதவிர வேரில்லாதபடியா லொருவிதத்தாலும் நாசமத்ததாகாது இப்படிசொல்லாத
வளை ஸத்பிரம்மாத்துவைதவாதிகளுக்குப் பெரிதானதோஷமுண்டு ஆகையால்பிரம்மத்தைத்
தவிர மைத்ததெல்லாம் நாசமுள்ளதுதான் ஒருவனுக்குஜன்மமு மனுதித்துவமும்கூடாதாகை
யால் கவுணமுக்கியவிபாகத்தால் நான்நிற்ணயிக்கிரே னெப்படிஎனில் எப்படிவேதத்துக்கு வி
யாஸாதிகளிடத்தி லுத்பத்திஉபசரிக்கப்படுகின்றனவோ அப்படியந்தந்தகல்பத்தி லுத்பத்தி
கேழ்வியாகிரபடியால் ஜன்மசப்தங்கள்கவுணங்களாகும் எப்படிநித்தியஸித்தனும் நிச்சலனும்
ஸத்துமானஆத்மாவுக்குப் பிரம்மவித்துக்களிடங்களி லாவிர்பாவரூபமான ஜன்மமுபசரிக்கப்
படுகின்றனவோ அப்படியுமெண்ணத்தக்கது ஸர்வத்துக்கு மனுதித்துவத்தைச்சொல்லுகின்ற
மொழிகளெல்லாம் முக்கியங்களாகுமென்றென்சித்தத்தில் நிற்ணயம்தோற்றுகின்றன ஸரியோ
ஸரியல்லவோ "ஸ்ரீகுருமூர்த்தி" வேதாந்தாதிகளில் ஜன்மாதிமொழிகளுக்கே மெத்தப்பிர
யோகமிருப்பதா லதுகளேமுக்கியங்களாகும்கள் இப்பிரபஞ்சமுத்பத்திக்குமுன்ஸத்தாயித்தெ
ன்றசுருதிவாக்கியங்களில்சொல்லியமுன்னென்றசப்தத்தால் ஸகலவிகாரங்களுக்கும்முன்னில்
லாமை விஸ்பஷ்டமாயிருப்பதா லதுகளுக்குத்பத்திவசனம் நிச்சயமாகவே இருக்கின்றன ஸக
லத்துக்கும்நாசத்தை நீரொப்புக்கொண்டிருப்பதாலுத்பத்தியும்ஸித்தித்தது உத்பத்திஇல்லாத
பக்ஷத்தில்நாசம்வரமாட்டாதல்லவா,பிரம்மத்தைத்தவிரஅன்னியத்திலிருந்துத்பத்தியைநிஷே
திக்கதாத்பரியமாகையால் ஜீவனுக்குத்பத்திஇல்லைஎன்று சொல்லியவசனங்க ளனேகமிருந்த
போதிலும்குத்தமில்லை, ஜீவன்பிரம்மத்தினிடத்திலேயேஉண்டாகிஅதிலேயே நசிக்கிரானென்
றுபிரஸித்தமாயிருப்பதால் மைத்ததிலிருந்துத்பத்திகூடாதென்றது யுக்தந்தான்இப்படியாகும்
பொழுது நூதனஉத்பத்திஇல்லாமையால் புராதனஉத்பத்தியுள்ள ஜீவாதிகளுக்கு அனுதித்துவ
வசனம் கவுணமென்றுநிச்சயம், எப்படி இக்காலத்தில்செய்யப்பட்ட காவ்யாதிப்பிரபந்தங்க
ளையபேக்ஷித்து வியாஸாதிகளால்செய்யப்பட்ட புராணங்களனுதிகளென்று சொல்லப்படுகின்
றனவோ எப்படிபிராகிருதங்களான கலித்ப்ரம்மங்களு மனுதிகளென்று சொல்லப்படுகின்றன
வோ அப்படி உபசாரமென்றரியத்தக்கது அந்தந்தகல்போத்பத்தியால் ஜன்மசுருதிகவுணமெ
ன்று நீர்சொன்னதற்கு பிரம்மத்துக்கு நிற்குணத்துவம் ஸித்தியாமல்போகிரதென்று முன்ன
மேசொல்லப்பட்டிருக்கின்றன, அனுதித்துவத்தை முக்கியமாகவே யொப்புக்கொண்டால் நிற்
குணப்பிரம்மத்துக்குப்போ லனந்தத்துவமும் முக்கியமாகும் அப்பொழுது மனேகவிகாரங்

களுக்கு நித்தியத்துவம்நேரிடுகிறபடியால் ஸத்பிரம்மாத்வைதவாதிகளுக்கு கேடுதான்நேரிடு
கின்றன "பிரம்மா" காலம்கர்ம்மமீசுவரன் அவித்தைமாயைஜீவன் முதலான நாநாவிதஸக
லவிகாரங்களும் நிர்விகாரவஸ்துவிலிருந் தெப்படியுண்டாயித்துசுள் பரப்பிரம்மமானது நிர்வி
காரமென்றும் சரீரமெனறும் சத்தியத்தென்றுமல்லவா பிரஸித்தம் அதற்கீக்ஷணபூர்வமான
ஸிரிஷ்டிகர்த்ருத்துவந்தா னெப்படிகூடும் "ஸ்ரீகுருமூர்த்தி" ஸச்சிதானந்தப்பிரம்மம் சரீர
மத்ததாயிருந்தபோதிலும் வித்யாசக்தியால் விர்த்திடண்ணப்பட்டிருப்பதால் விகாரங்களைப்
பார்த்து ஸிரிஷ்டிக்கயோக்கியதையுள்ளதுதான், நிர்விகாரப்பிரம்மமானது சித்விலாஸத்தின்
னதிவேகத்தா லெப்பொழுதுகலங்கித்தோ அப்பொழுது முக்குணங்கள் முதலானவிகாரங்க
ளுண்டாயிற்றுசுள் அதுமுத லத்வைதாத்மாவுக்குத் துவைதத்துடன்சேர்க்கையாயிற்று, லீலை
யாலடையபபட்டபடியா லந்தவிகாரங்கள்நிமித்தமாக பரமாத்மாவுக்கு ஹானியுமில்லை, எப்
படிதாரித்திரியத்தை யபினயஞ்செய்கின்றதனிகனுக்கும் பிரித்தியத்துவத்தை யபினயஞ்செய்
கின்ற பிரபுவுக்கும் ஹானிஇல்லையோ அப்படிவிகாரரூபத்தை யபினயஞ்செய்கின்ற நிர்விகார
வஸ்துவுக்கிப்பொழுது வியவஹாரதெசையிலும் யாதொருஹானியுமில்லை, விகாரங்களுடைய
உத்பத்திக்கு முன்ஸத்துத்தானிருந்துதென்று தீர்மானிப்பதி லஸத்தேமுன்னுயிற்றென்ற சுரு
திக்குக்கேடுநேரிடுமென்று சங்கிக்கவேண்டாம்ஸத்சுருதியானது காரணபரமென்றும்அஸத்சு
ருதியானது காரியபரமென்று நிச்சயமல்லவா ஆகையால் விரோதமில்லை, ஸத்துவம்முதலான
முக்குணவழியா லந்தந்தரூபத்தையடைந்த அத்வைதப்பிரம்மமும் நாநாபோல் தோற்றுகின்
றன நாநாத்துவமானது பாதியுடையதாகையா லனித்தியமென்று சொல்லககூடும், இதைநன்
ருகவிசாரிக்கும்பொழு தனித்தியத்துவத்தா லஸத்யமென்றுந்தீர்மானம் ஸவிகாரத்தைவிசாரி
க்கவேணுமாஅல்லது நிர்விகாரத்தை விசாரிக்கவேணுமாவென்றகேழ்விக்கு தள்ளத்தக்கதாக
ஸவிகாரத்தையும் கொள்ளத்தக்கதாக நிர்விகாரத்தையும் விசாரிக்கவேணுமென்றுத்தரஞ்சொ
ல்லப்படும், விகாரத்துடன்கூடியவஸ்துவே நிர்விகாரமாகையால் நிர்விகாரம்வேறாயில்லைஎன்
றுசொல்லக்கூடாது, ஏனெனில் விகாரத்துடன்கூடியவஸ்துவுக்கு குணத்திரயவசத்தா லுத்ப
த்திநாசம் சேழ்கிறபடியால் நிர்விகாரத்துவங்கூடாது, தேகங்களுக்கும் தேகிகளுக்குமிருக்கி
ரது முதலானஷட்பாவங்கள் காணுகிறதுபோ லுபாதிகளுக்கு முபாதியுடையவர்களுக்கும்
ஷட்பாவங்களுண்டு, தேகிகளுக்கும்மோக்ஷதெசையில் அதேகியிடத்தில் லயம்ஸித்திக்கிறபடி
யால் தேகம்நசிக்கும்பொழுது தேகிக்குநாசமில்லைஎன்றும் சொல்லக்கூடாது, உபாதியத்தவ
னெவ்விடத்திலாவதிருந்தபோதிலு முபாதியுடையவனைவிட் டுபாதியானதிவ்விடத்தி லிருக்க
மாட்டா, உபாதியுள்ளவன்ஸம்ஸாரியாகையாலு முபாதியத்தவனஸம்ஸாரியாகையாலு முபா
திக்கு முபாதியுடையவனுக்கு மன்னியனாகிய நிர்விகாரநிருபாதிகசேதன னொருவனிருக்கிரா
னென்றுநிச்சயம், உபாதியானதேகத்துக்கு முபாதியுடையவனானஜீவனுக்கும் ஸாக்ஷியாக எவ
ன்சொல்லப்பட்டானோஅவனே விகாரத்துக்கும் விகாரமுடையவனுக்கு மன்யனானகையா லவ
னைத்தவிர வேறையொன்றுங்கிடையாதெனி லுள்ளதுதானப்படிஇருந்தபோதிலும் ஸாக்ஷிய
மானவுபாதியை யபேக்ஷித்திருப்பதா லந்தஸாக்ஷியைத்தவிர வேறாயொருவனிருக்கிரானெ
ன்றே நிச்சயம் எவனபேக்ஷயத்தவனு முதாஸீனனுமகண்டானந்தசித்கனனும் ஸாக்ஷிஸாக்ஷி
யங்களத்தவனு முபாதியத்தவத்வைதியும் குணத்திரயமத்தவனும் நிர்விகாரநிரஞ்ஜனனுமான
பரமாத்மா தடஸ்தலக்ஷணாதீதனாகத் தன்னால்ஸித்தித்திருக்கிறானே அந்தஜன்மாதிகாரணஸா
க்ஷிசைதன்னியத்தைக்காட்டிலு மன்யனான அவனே ஸகலவேதாந்தங்களாலு மறியத்தக்கன
வனென்று தீர்மானிக்கப்படுகின்றன, இதில் சிலர்கள் ஸாக்ஷித்வதர்ம்மம்மாத்ரம் கல்பிக்கப்
பட்டதாகையால் ஸாக்ஷியைத்தவிர பரமாத்மா வேறாஇல்லைஎன்று சொல்லுகிறார்கள் அதில்
தர்ம்மதர்ம்மிகளுக்கு பேதமில்லாமல்போகிறபடியா லந்தபக்ஷம்ஸரிஇல்லை, தர்ம்மத்தை யப



வாதம்செய்யும்பொழுது தர்ம்மிக்குமபவாதம் ஸித்திக்கின்றனவல்லவா, அக்னியின்னுஷ்ணத்
தையபவாதஞ்செய்யும்பொழு தக்னிக்குமபவாதம்வருவதுபோலென்றதில் மணிமந்திரம்மு
தலானதிவ்விடத்தில் சரியானதிருஷ்டாந்தமல்ல "பிரம்மா" ஸாக்ஷியானவன் பிரத்யகாத்மா
வாகையா லவனையபவதித்தாலது நீயாகிராயென்ற மகாவாக்கியம் வியர்த்தமாகுமே துவம்ப
தத்தின்னிலக்ஷியார்த்தமான பிரத்யகாத்மாவுக்கு தத்பதத்தின்னிலக்ஷியார்த்தமானப் பிரம்ம
த்துடனைக்கியமல்லவா போதிப்பிவிக்கப்படுகின்றன இவ்விடத்தி லபவாதசப்தமும் வினசார்
த்தத்தில் சொல்லப்பட்டிருக்கின்றனவே நசிக்கத்தக்கன அந்தப்பிரத்யகாத்மாவுக் கெப்படிப்
பிரம்மத்துடனைக்கியம்கூடும், ஆகையால் ஸாக்ஷித்வதர்ம்மத்தைமட்டும் பிரத்யகாத்மாவிட
த்திலபவாதஞ்செய்யவேணுமேதவிர அந்ததர்ம்மியை யபவதிக்கக்கூடாது "ஸ்ரீகுருமூர்த்தி"
இவ்விடத்தி லபவாதசப்தம் வினசார்த்தந்தானாகிலும் மகாவாக்கியத்துக்கிதனால் விரோதமி
ல்லை, எப்படிஎனில்கேளும் உபாதியையபேக்ஷித்ததர்ம்மத்துக் குபாதியுடன்கூட முசல்கொ
ம்புபோல பாவரூபமானநாசம் சொல்லப்படுகின்றன பிரம்மத்தையபேக்ஷித்ததர்ம்மிக்குப்
பிரம்மத்துடன் கைநெல்லிக்கனிபோல் ஸ்பஷ்டமாக பாவரூபமானநாசம் சொல்லப்படுகின்
றன, பிரம்மத்துடனைக்கியத்தையடைந்த தர்ம்மியானவன்பிரம்மத்திலேயே லபித்தானல்லவா
வேறாயாகவிராமையால் நாசவசனமுசிதந்தான் எப்படியுஷ்ணதர்ம்மம் நசித்தகாலத்தில் தர்
ம்மியானகாரியாக்னியானது தனக்காதாரமான வெரகைவிட்டு காரணாக்னியில் லயிக்கின்றன
வோ அப்படியாகும் ஒய்விதியே காரணாக்னி காணப்படாமலிருந்தபோதிலும் சாஸ்திரத்தால்
நிச்சயிக்கிரோம் ஆனால் சாஸ்திரத்தால்மட்டும் நிச்சயிக்கவில்லை, அரணியில் காணப்படுகின்
றனவல்லவா சொல்லியதர்ம்மியான கூடஸ்தப்பிரத்யகாத்மா ஸகலஜீவர்களுக்கும் முக்கிய
ஸாக்ஷியு மாகாசபூமிமுதலானஸகலத்துக்கு மாத்மாவுமானவிபுவைச் சொல்லியபடியால் ஹி
ரதயம் முதலானவிடங்களில் சொல்லப்பட்டவனென்றெண்ணக்கூடாது, கவுணமுக்கியபேத
த்தால் விபுத்வமுமிரெண்டுவிதமாகையால் தர்ம்மியுமதர்ம்மியுமான பிரத்யகாத்மாபரமாத்மா
வென்ற விரெண்டுபெயர்களுக்கும் விபுத்வம்சொல்லலாம், பிரத்யகாத்மாவானவன் ஸத்வவிர்
த்தியுடன்கூடியபடியால் மாயாமய பெரியதேகியான ஸகலஜகத்கர்த்தாவாகிய பரமேசுவரனு
வானெனில் ஸகலவுலகஸாக்ஷித்வமிருந்தபோதிலு மெங்கும்கைகால்களுள்ள ஸாத்விகமாயீசு
வரனுக் காத்மஸாக்ஷித்வமில்லாதபடியால் ஸாக்ஷித்வமில்லை அவ்வுலகேசுவரஜீவஸாக்ஷியான
பிரத்யகாத்மாவானவ னீசனுக்கும்பரன், ஸத்வகுணமும் காரியகாரணபேதத்தா லிரெண்டு
விதமாகும் அதில்சுத்தமான காரியஸத்வகுணம்சொல்லிய வீசுவரனிடத்திலாகும் அசுத்தமா
னகாரியஸத்வகுணமாதிகாரிசனும் காமிகளுக்குக் காம்யபோகத்தைக் கொடுக்கிரவனும் நிஷ்
காமிகளுக்கு சித்தசுத்தியைக்கொடுக்கிரவனுமான வீசுவரனிடத்திலாகும் அன்னியமான விசு
த்தகாரணஸத்வகுணம் கிரமமுக்தியைக்கொடுக்கிரவனும் தேகமத்தவனுமாகச்சொல்லப்பட்
டப் பிரத்யகாத்மாவிடத்திலாகும் அன்னியமான சுத்தகாரணஸத்வாம்சம் மனோவிசுத்தியைக்
கொடுக்கிர வங்குஷ்டாதிப்பிரமாணமுள்ளப் பிரத்யகாத்மாவிடத்தில் ஸித்தித்திருக்கின்றன
ஆகையால் பஞ்சிகிருதபூதஸாக்ஷியும் ஜீவேசுவராதீதனும் தேகதர்ம்மமத்தவனும் நிர்க்ரூபி
யும் முதலாவதிவனும் பிரகிருதியுடன்கூடின்வனுமான புராதனபுருஷனை முதலாவதுசிந்தியும்
ஒய்விதியே பிரகிப்பிரத்யகாத்மாவை பரிபூர்ணசேதனனும் பரமாத்மாவென்றுபேருள்ளவனும்
குணலேசமத்தவனுமான தன்னைத்தவிரவேறைஇல்லைஎன்றறிந்து தன்யனாக சீக்கிரத்திலாவீர்
"இப்படி அப்பயதீக்ஷிதரால் மொழிபெயர்க்கப்பட்ட குருஞ்ஞானவாஸிஷ்டத்தில் ஞானகாண்
டத்தின் க - வது பாதத்தில் கஅ - வது அத்தியாயம் முற்றிற்று.

தலானசகலத்துக்குவிலயஸ்தானமாக கேழ்வியாகிறபடியாலும் வாயுவல்ல, ஜீவனுடைய ஜன்
மாதிகளுக்கு காரணமென்றபடியால் ஆகாசசப்தத்தால்சொல்லப்பட்டது சொல்லியபிரத்தி
யகாத்மாதான் ஜடத்துவமுதலானதர்மங்கள் பிரசித்தமாயிருப்பதால் பூதாகாசமல்ல, பிரு
ணசப்தமும்வாயுவிகாரமல்ல (எ) ஆகாசத்துக்குமேல் விளங்குகிறஜோதியானது நாலுபாத
த்துடன் கூடியதாகச்சொல்லப்பட்டபடியால் பரமாத்மாதான், சுருதியில்சொல்லிய திருபாத்
பிரம்மமானது அமிருதமென்று சொல்லப்பட்டிருப்பதால் பரமாத்மாதான் அமிருதமும்
ஜோதியும் ஏகமாகையால்ஸகுணமென்றெண்ணக்கூடாது அபரிச்சின்னரூபமாகையால்தேகத்
துக்குள்ப்பட்டகுத்தமுமில்லை காயத்திரியின்நான்கு பாதத்தைச்சொல்லியபடியால் பரமாத்
மாவில்லையென்றால் முமுக்ஷுவுக்கு அந்தநிற்குணத்தில் சித்தத்தின் அற்பணம்சொல்லப்பட்டி
ருப்பதால்சந்தோகர்களால் மீமாம்ஸைசெய்யப்பட்டிருப்பதாலும் பூதம்பிரிதிவிதேகம் இரத
யம்என்றகாயத்திரியின் நான்குபாதத்தால் பரனுக்குநான்குபாதம்ஸூசிப்பிவிக்கப்படுகிறபடி
யாலும் ஜோதியானது பரமாத்மாதான், ஆகாசத்தைகாட்டிலுமென்றும் ஆகாசத்திலென்றும்
வேத்மைபேதமிருந்தபோதிலும் இரெண்டுசுருதியிலும் பிரகாரணமொன்றாகையால்பரமாத்மா
வுக்குபேதமில்லை மரத்தின்நுனியில்கழுகுபக்ஷிஎன்றும்மரத்தின்நுனிக்குமேல் கழுகுபக்ஷிஎ
ன்றும்சொல்வதில்சொல்பேதமேதவிரஅர்தபேதமில்லையல்லவா (அ)கௌஷீதகிஉபநிஷத்தில்
சொல்லியபிராணன் அவ்விடத்தில்காணுகிறஸ்பஷ்டமான அனேகஅடையாளங்களால் பரமா
த்மாதான்ஸர்வகர்மக்ஷயவசனமானது பரமாத்மாவைத்தவிர மைத்தவனிடத்தில்ஸித்திக்கமா
ட்டாதல்லவா பிரத்தியகாத்மாவிடத்தில் பரிச்சேதமிருப்பதால்கூடாது என்னைஅரியென்று
இந்திரனுடைய உபதேசவசனத்தாலிந்திரனென்றதேவதையேதவிர பரமாத்மாவில்லை என்றால்
இவ்விடத்தில் அத்தியாத்மஸம்பந்தம் வெகுவாயிருப்பதால் இந்திரனாலுபலக்ஷிக்கப்பட்ட
பிராணன் பரமாத்மாதான், துவஷ்டாவின்ஹத்தியினாலிந்திரனுக்குபாபஸம்பந்தமத்ததும் பிர
ம்மவித்தையின்மகிமையாலேயே ஆகிலும் ஆகிசாரிகனாகையாலிந்திரனுக்குமாத்திரமதுயுக்த
மேதவிரமைத்தப்பிரம்மவித்துக்களுக்குஹத்திபண்ண இடமுமில்லை பண்ணினால்பிரம்மவித்
தைஇல்லாதபடியால் பாபமுமுண்டு வாமதேவனைப்போல் தேவேந்திரனும் சாஸ்திரதிருஷ்டி
யால்பரமானஜோதியானது உபதேசிக்கப்பட்டது வாக்கைஅரியக்கூடாது வக்தாவை அரிய
வேணுமென்றதுஜீவனுடைய அடையாளமாகையாலும் தேகம்கிளம்புகிறது பிராணனுடைய
அடையாளமாகையாலும் பரமாத்மாவில்லைஎன்றால் ஜீவோபாஸனம்முக்கியப்பிராணோபாஸ
னம்பரமாத்மோபாஸனமென்று மூன்றுவிதஉபாஸனம்சொல்லப்பட்டிருப்பதால் அந்த ஆத்
மாவுக்குபரமாத்மாவிடத்தில் யோகமிருப்பதாலும் பரதர்தனோபாக்கியானத்தில் சொல்லியபி
ராணன்பரமாத்மாதான் (௯) இப்படி அப்பயதீக்ஷிதரால் மொழிபெயர்க்கப்பட்டதத்துவஸா
ரூயணசந்திரிகையின் ஞானகாண்டத்தில்-உ-வதுபாதத்தில்-உ-வது அத்தியாயம் முற்றிற்று.

## ௩-வது அத்தியாயம்.

சகலமும்பிரம்மம் அதினிடத்திலேயே சகலமும் உண்டாகிஇருந்துலயிக்கின்றனவெ
ன்றறிந்துசாந்தனாகி அதைஉபாசிக்கததக்கது என்றுபிரஸித்தமாக உபதேசிக்கப்பட்டிருப்ப
தால் ஜீவனாவதுஈசனாவது அரூபப்பிரம்மமாவது பிரகிருதயில்லை ஜீவேசர்களிரெண்டும்தள்ள
த்தக்கனகுணமுள்ளதாகையால் அரூபவஸ்துவானது கொள்ளக்கூடாததாகையாலும் கொள்ள
த்தக்கன சித்ரூபப்பிரம்மத்தினிடத்திலேயே பிரஹத்துவம் ஜீவகாரணத்துவம் சாஸ்திரயோனித்
தும் முதலானசொல்லியகுணங்கள்கூடும் சிலர்கள்ஸச்சிதானந்த ரூபியானபரமாத்மாவுக்கு
உபாஸ்யத்துவங்கூடாதென்று சொல்லுகிறார்கள் அவர்களைவேதிகளென்று சொல்லக்கூடா



தல்லவா, உபரஸிக்கக்கூடாத நிற்குணாதீதவஸ்து ஒன்று சொல்லப்படுகின்றன, அதுவாக்கு
மனதுகளுக்கெட்டாததாகையால் அது அரியத்தக்கதாகவுமாட்டாது, சாரீரனென்றஜீவன்
ஸகுணனாகையா லுபாஸிக்கத்தக்கனவனுமல்ல எங்கும்தள்ளுகிடையும் அவனிடத்தில்ஸித்
தித்திருக்கின்றன சொல்லியபிரம்மத்துவம் முதலான குணங்களும்கூடாது ஜீவனுக்குகர்ம
கர்த்திர்த்துவவியபதேச மிருப்பதால் உபாஸ்யத்துவமும்கிடையாது பிரத்தியகாத்மாவுக்கு
பரனோடே ஐக்கியம்ஸத்ய மெப்படிஎனில் நெல்வால்போல ஆகாரமுள்ளவன் சாரீரனென்
றும் பெரிதானதுபிரம்மமென்றும் சப்தவிசேஷத்தால் பேதம்சேழ்கிறபடியால் தத்துவம்பத
வாச்சிய அர்தர்களானஜீவேசர்களை மர்தனம்செய்து அதின்இலக்ஷிய அர்தங்களான பிரத்தியக்
ப்பிரம்மங்களுக்கைக்கியும் சொல்லப்படுகின்றன ஆகையாலிவ்விடத்தில் அவித்தைமாயை ஸம்
பந்தப்பட்டபடியாலும் சரீரித்துவம் ஸமமாயிருப்பதாலும்ஜீவேசர்களிரெண்டுபேர்களுக்கும்
ஸித்தியில்லை ஈசுவரன்சகல பூதங்களுடைய இரதயதேசத்திலிருக்கிறானென்ற ஸ்மிருதியால்
சாரீரப்பிரம்மங்களுக்குபேதமும் பிரம்மத்தினிடத்திலீசசப்தமும் கேழ்வியாகிறது, ஆனால்பி
ரகிருதஆத்மா அல்பமானஇடத்திலிருப்பதனால் அணுத்துவஞ்சொல்லப்பட்டிருப்பதாலும் பர
மாத்மாவில்லைஎன்றால் ஆகாசம்போல் ஸர்வகதமாகதேடத்தக்கதென் றிவ்விடத்திலும் சொல்
லப்பட்டிருப்பதால் பரமாத்மாதான் ஆத்மாவுக்கு அணுத்துவம்முதலானவசனத்தால் பரிச்
சின்னதுவத்தை ஸ்திரப்படுத்தவேணுமென்றஎண்ணமொருமதஸ்தர்களுக்குமில்லை, ஆனால்பிரம்
மம்ஸர்வகெதமாயிருந்தபோதிலும் பிராணிஸம்மந்தம் காணப்படுகிறபடியால் ஜீவஸம்பந்தப்
பட்டபோகம் பரமாத்மாவுக்குத்தானென்றால் கர்த்திருத்துவாதிகுணமுள்ளவன்ஜீவனென்றும்
அதில்லாதது பிரம்மமென்றும் சொல்லப்படுகிறபடியால் கர்தாவுக்கேபோகமேதவிரஸாக்ஷி
க்கில்லை, சாரீரபிரம்மங்களுக்கு சித்ரூபத்துவம் ஸமமாகையால் போகமும்ஸமந்தானென்ற
பிராந்தியை புத்திமான்தள்ளட்டும், ஜீவனுக்குசித்ரூபத்துவமிருந்தால்போக வார்த்தைதா
னெப்படிவரும் சித்தினுபாஸனைகையாலல்லவா உபமர்தனம் சொல்லப்படுகின்றன (௧0)
சராசரானதை ஜஸப்பிராஞ்ஜீவர்களை பக்ஷிக்கிறபடியால் பக்ஷிக்கிறவன் பரமாத்மாவே
தவிரபரமேசுவரனில்லை, பிரம்மக்ஷத்திரியாதி பிரபஞ்சபக்ஷணஞ் சொல்லப்பட்டபடியால்பர
மெசுவரனாகயிருந்தபோதிலும்இலக்ஷணனால் பரமாத்மாவேபக்ஷிக்கிறவனாவான் அப்படியாகில்
சுருதிவாக்கியம் அனுகூலமாகும், எவனுக்குபிரம்மக்ஷத்திரங்கள் அன்னமோ எவனுக்குமிருத்
தியு நெய்யோ அவனெந்த இடத்திலிருக்கின்றானோ அவனை எவனரியுவானென்ற சுருதியில்
பரமேசுவரனுக்கு அதிஷ்டானம் பரமாத்மாவென்று ஸ்பஷ்டமாயிருப்பதால் சந்தேகமில்லை
எவன்மோக்ஷஸமயத்தில் ஜீவர்களை தன்னிடத்திலுபஸம்ஹாரஞ்செய்கிறானோ அவனீசனாலுப
லக்ஷிக்கப்பட்ட பரமாத்மாதான் (௧௧) பிராணிகளுடைய இரதயகுகையில் பிரவேசித்திருக்கிற
இரெண்டாத்மாக்கள் ஜீவேசர்களாவது ஜீவபிரத்தியகாத்மாக்களாவது பிரத்தியகாத்ம பரமா
த்மாக்களாவது ஆகலாம், பசுவின்துக்கம் அபிமானத்தால்பதிக்குநேரிடுகிறபடியால் ஜீவேசு
வரர்களுக்குகர்மபலபோகமுண்டு, சாரீரப்பிரத்தியகாத்மாக்கள் நிழல்வெய்யில்கள்போலாகை
யால் கர்மபலபோகம்குஹயில்பிரவேசம் சாயாதபமென்றமூன்று விசேஷணங்களும் பிரத்திய
காத்மாவுக்குசித்திக்கின்றன, பிரத்தியக்பரான் பிரவேசிப்பதில் மைத்த விசேஷணமிரெண்டும்
குடைக்காரனிலக்ஷணையால் ஸித்திக்கின்றன, பிரத்தியகாத்மாவுக்கு ஸஞ்சிதாகாமிபலமில்லா
விட்டாலும் பிராரப்தபலமிருப்பதால்கர்மபலமும் பரிச்சேதமிருப்பதால் பிரவேசமும் வெய்
யில்போலவுமிருக்கின்றன, உலகத்தில் அம்சத்திலுள்ளதர்மங்கள் அம்சியிடத்திலும் உபசார
மாகபிரயோகிக்கப்பட்டிருப்பதால்ஒய்நாலுமுகரோஒருகுத்தமுமில்லை, (௧௨)கண்ணுக்குள்ளிரு
க்கிறபுருஷன் பிரத்தியகாத்மாதான் அவன்பரமாத்மாவின்னம்சமாகையால் அனேகமாகபர
னுடைய தர்மங்களவனிடத்தில்கூடும், இந்தகூடஸ்தஉபாஸனையை வெகுவாகபூர்வஞ்சொல்லி

யிருந்தபோதிலுமிதின்பலத்தைச்சொல்லாதபடியால்அந்தஇந்தஇரெண்டுஅதிகரணங்களுக்கு
இப்படிப்பட்டபேதம், அந்தஇந்தபிரத்தியகாத்மாவுச்கு ஸ்தானம்ரூபம்முதலானபேதமிவடத்
தில் சொல்லியபடியாலும்பேதம் சுவர்ணமயமான தாடிமுதலானதுகள்முமுக்ஷுக்களால்தள்
ளத்தக்கனதுகள், சுகமென்றும் ஆகாசமென்றுஞ் சொல்லப்பட்டபடியால் தாமரைஇலேஜலம்
போலொட்டில்லை என்றபடியாலும் பரோக்ஷஞ்ஞானிக்கு எந்தகெதிசொல்லப்பட்டுதோஅதே
பிரத்தியகாத்மாவானஅக்ஷிபுருஷவித்துக்கு திரும்பிவரவில்லை, ஆகாசம்போல்வியாபகனானபர
மாத்மாவுக்கு யானைக்குக்கிளிக்கூட்டில்போல்நேத்திரத்திலிருப்பு ஸம்பவிக்கமாட்டாதாகையா
ல்பிரகிருதன் பிரத்தியகாத்மாதான்பரனில்லை, பிரத்தியகாத்மவித்துக்கும்பரோக்ஷப்பிரம்மவித்
துக்கும்அணுத்துவபூர்ணத்துவமிருந்தபோதிலும் அரிவைக்காட்டிலும் பார்வைசிலாக்கியமா
கையால்இரெண்டுபெயர்களுக்கும்அர்சிருதிமார்கமாகசமானகெதி சொன்னதுயுக்தந்தான், பர
மாத்மவித்துக்குஅபரோக்ஷஞ்ஞானியாகையால்பிரளுதிலயம் சொல்லப்பட்டிருக்கின்றனவே
தவிரபோக்குமில்லைவரவுமில்லை(கூ)ஆதிதைவிகங்களில்அந்தரியாமியாகச்சொல்லப்பட்டவன்
பரமாத்மாவேதவிர வேறாஜிவேசப்பிரத்தியகாத்மாக்களில்லை, ஆத்மத்துவம்அமிருதத்துவம்
முதலானதர்மங்கள்சொல்லப்பட்டிருப்பதால் பரனிடத்தில்தான் அந்ததர்மங்கள்முக்கியமாகு
ம் பரிச்சின்னசுவரூபியாகையால் பிரத்தியகாத்மாவிடத்தில் முக்கியமாகாது, எப்படிபிரத்திய
காத்மாவுக்கு ஜிவேசர்கள்கரணமோ அப்படிபரமாத்மாவுக்குபிரத்தியகாத்மா கரணனுவான்,
இப்படியாகும்போதுஸர்வத்துக்கு ஆந்தரனானபரன்அசேதனமான பிரதானத்தினிடத்தில்ஆத்
மத்துவம்முதலானதர்மங்கள்சொல்லப்படாததுனல் இதரதர்மங்கள்சொல்லப்பட்டிருப்பதா
லும்அந்தரியாமியாகமாட்டாது, காண்வாளும்மாத்தியந்தினளும்பரன் ஆதாரமாகையால் விஞ்
ஞானத்மாவிடத்தில்ஜீவனைவிபுவாகச்சொல்லுகின்ருர்கள், அதிருஷ்டிருத்துவாதி தர்மங்களும்
திருஷ்டிருத்துவாதிதர்மங்களும்பரனிடத்தில்தான்சுவபாவமாகஸகலமும் ஸம்பவிக்கிறதுகள்
(கச)சுருதியில்ஸர்வஞ்ஞத்துவாதிதர்மங்கள் சொல்லப்பட்டிருப்பதால் அதிருச்சியத்துவாதிகு
ணங்களுள்ளவன்பரமாத்மாதான் இதருளில்லை, ஸர்வாந்தரத்துவமில்லாததுனல் பரமேசுவர
னிடத்தில்அந்த்தர்மங்கள்கௌணமாகும், திவ்வியன்அமூர்தனென்றஇவ்விதவிசேஷணங்களா
லும்அக்ஷரத்துக்குபரனென்றதுனலும் அந்தவிசேஷணபேதங்களால் பரமாத்மாவையேதீர்மா
னிக்கின்றன ஈசுவரனைக்காட்டிலும் ஜிவனுக்குபாரம்மியமிருப்பதால் ஜிவனுக்கு பரசப்தமும்
பரனுக்குபரதாசப்தமும்ஸித்தித்தது, அக்கினிதலை என்றதுமுதலானரூபம் பரமேசுவரனுடை
யதாயிருந்தபோதிலும அவனைஅனுவதித்து ஙித்தியனனபரமாத்மாவேபிரதிபாதிக்கப்படுகிரு
ன்ஜீவேசரிரெண்டுபேர்களும்ஸர்வதா ஒன்றுக்கொன்றுஅன்னியர்களாயிருப்பதால்ஸர்வபூதா
ந்தருத்மாவென்றபரமாத்மாவுக்குஅவர்கள்அன்னியர்கள்தான(கரு)வைசுவானரசப்தம் ஆத்ம
சப்தமிரெண்டும்பரத்தியக்பருளிடங்களில் ஸாதாரணமாயிருந்தபோதிலும் பிருதெசமாத்திர
மென்றவிசேஷணசப்தமானது ப்ரத்தியகாத்மாவிடத்தில்அஸாதாரணமாயிருப்பதால்வைசுவா
னரன் ஒட்டைச்சாணுகாரமுள்ளபிரத்தியகாத்மாதான், ஸர்வபூதங்களை பிரானைசெய்கிற அ
னுமானம் பிரத்தியகாத்மாவிடத்தில் தானுகும் பரனிடத்தில்தூஷிக்கப்படும், அசிந்தியனென்
றுசொன்னதுனல் பரனென்றெண்ணக்கூடாது இதென்றுவேறையாகப்பரனை சிந்திக்கக்கூடா
மைபோல் மூர்த்தியுடன் பிரத்தியகாத்மாவை சிந்திக்கக்கூடாமையால் குற்றமில்லை, மிகவும்அ
ரூபமானபிரம்மத்தை ஒருவிதத்திலும் சிந்திக்கக்கூடாமைனல் அதைஇவ்விடத்தில் பிரதிபாதி
க்கவும்இல்லை, ஒருதர்ம்மமுமில்லாதவஸ்துவில் ஸர்வபூதப்பிராணேகிருதுவதர்ம்மமெப்படிகூடு
ம், ஆகையாலந்தசங்கைக்கு எவ்வளவும் இடமில்லை, ஆனல்வைசுவானரசப்தத்தாலும் கார்க
பத்தியம் முதலானமூன்றுஅக்கினியை கல்பித்தபடியாலும் புருஷனிடத்திலிருப்புனலும் ஈசு
வரனை வைசுவானரனுவானென்ருல் மனதுமுதலானதுகளில் பிரம்மதிருஷ்டியல்லவாஉபதே



சிக்கப்படுகின்றன ஆகையாலீசன்வைசுவானரனில்லை, புருஷனிடத்தில் புருஷனைஅரிந்தவனெ
ன்றுசொல்லியிருப்பதால் உள்ளும் வெளியும் வியாபித்தபரமாத்மாவென்று சங்கிக்கஇடமி
ல்லை, ஆகையால் வைசுவானரன் உஷ்ணப்பிரகாசமுள்ளபடியால் பூதாக்கினியுமில்லை, அபிமா
னியாகையால்அக்கினிதேவதையுமில்லை(கசு)ஈசுவரானுவாதாபேக்ஷயன்றியில்நேராகவேபிர
த்தியகாத்மாவை கிரக்கிரதில் விரோதமில்லையென்று ஜைமினிஆசாரியரெண்ணுகிருர், இரதயா
தியில் அபிவியக்தியிருப்பதால் விரோதமில்லைஎன்று ஆச்மரத்திய ஆசாரியரெண்ணுகிருர், பிர
த்தியகாத்மாவின் அனுஸ்மரணத்தால் விரோதமில்லைஎன்று பாதரிஆசாரியரெண்ணுகிருர்; பிரு
ப்திஇருப்பதால் விரோதமில்லைஎன்று திரும்பவும் ஜைமினிஆசாரியரெண்ணுகிருர், இந்தப்பிர
த்தியகாத்மாவைபுருவங்களுக்கும் மூக்குக்கும்நடுவில் ஜாபாலர்கள்சர்வபாபனுசம் செய்கிரவ
னுகச்சொல்லுகின்ருர்கள், சகலவேதாகச்சியஸாரகண்டனன பிரத்தியகாத்மாவைதீபதுல்லிய
னுகவிவேகிகளரியுகிருர்கள்(கஎ)இப்படிஅப்பயதீக்ஷிதருல்மொழிபெயற்க்கப்பட்டதத்துவஸா
ருயணசந்திரிகையில்ஞானகாண்டத்தில் உ - வது பாதத்தில் ங - வது அத்தியாயம்முற்றிற்று.

## ச-வது அத்தியாயம்.

ஆகாச பூமிகளுக்கிருப்பிடமாகச் சொல்லப்பட்டவன் ஆத்ம சப்தமிருப்பதால் பிரத
தியகாத்மாதான் பரனுமில்லை அதீதனுமில்லை, பூர்வம் நேத்திராதிகளிலிருக்கிறவனுகச் சொல்
லிய பிரத்தியகாத்மாவானவன் பேதமாக உபாஸிக்கத்தக்கனவன், இந்தப்பிரத்தியகாத்மாவா
னவன் நேத்திராதிகளுக்கதிஷ்டானமாக அபேதமாக உபாஸனைசெய்கிறவன் மனனஞ்ஞானிக
ளானமுக்தர்களால் அடையத்தக்கனவன் நாமரூபதியாகத்தால் பூர்ணனனபுருஷன், இதுமா
யையும்ஆகாது ஜகத்காரியத்தாலனுமானிக்கப்பட்ட ஈசுவரனுமாகாது, ஆத்மஞ்ஞானமில்லாத
வர்களால் ஜீவனிடத்திலாத்மசப்தமுபசரிக்கிறபடியால் ஜீவனும் ஆகாச பூமிகளுக்கு அதிஷ்
டானமாக மாட்டான் சாரீரனரியுகிறவனென்றும்பிரத்தியகாத்மா அரியத்தக்கனவனென்றும்
இரண்டுபேர்களுக்கு பேதஞ்சொல்லப்பட்டிருப்பதா லிந்தப்பிரகரணமும் பிரத்தியகாத்மபர
மாகவே இருப்பதாலும் இதரர்களான பரற்கள் விஷயமுமில்லை அபரற்கள் விஷயமுமில்லை,
ஒருவன் சாக்ஷியாகவும் அன்னியன் கர்மபலபொக்தாவாகவும் பேதமிருப்பதால் வியவகாரதெ
சயில் அபேதங்கூடாது; ஸாங்கியனுல் சொல்லப்பட்ட ஸத்துவக்ஷேத்திரஞ்ஞபக்ஷத்தில்அசே
தனமான ஸத்துவத்துக்கு பிரகாசமில்லாமைனல் வெகுதூஷணமிருக்கின்றன (கஅ) ஸம்பிர
ஸாதனென்ற பிருஞ்ஞ ஜீவனுக்குமேல் சொல்லப்பட்டிருப்பதால் பூமாவென்ற பூர்ணவஸ்து
வானது பரமாத்மாதான் ஆத்மாவிடத்திலிருந்து பிராணனுண்டாச்சுதென்று மேல் சொல்லியி
ருப்பதால் பிராணனும் பூமாவாகாது, ஸம்பிரஸாதனென்ற சுஷுப்தனுக்கும்அபரனுகையால்
ஜீவனும் பூமாவாகான், அப்படி இரண்டுவிதப்பிரத்தியகாத்மாவும்ஆகான் எதிலிரண்டாவதை
பார்க்கிருனில்லையோ என்று கேழ்க்கிறபடியால் பரனுக்குபரனுயும் தடஸ்தலக்ஷணமத்தவனு
யும் பூர்ணனுயும் உள்ள ஆத்மாவே பூமசப்தத்தால் ஸாதிக்கப்படுகிருன், இரண்டாவதைகா
ணுமலிருக்கின்றது முதலானதர்மங்களும் பரமாத்மாவிடத்திலேயே முக்கியமாகும் பிரத்
தியகாத்மாவிடத்தில் முக்கியமாகாது, சுஷுப்தவாதிகளால் சுஷுப்தனே பூமாவென்று சொ
ல்லப்படுகின்றன அதுமிகவும் கஷ்டம் (ககூ) கார்கி என்ற ஸ்திரீயின் பொருட்டு யாஞ்ஞவல்க்
கியருல் சொல்லப்பட்ட அக்ஷரமும் விபுவான பரமாத்மாதான் ஆகாசம்வரை சகலத்தையும்
தரிக்கிறபடியால் ஜிவனீசன் எழுத்துக்கள் அக்ஷர சப்தத்தால் சொல்லப்பட்டதில்லை, ஸூரிய
சந்திரர்களுடைய சாஸனததினுல் அந்த தாரணமென்ற சாஸனம் காரியப்பிர்மமத்தின் காரிய
மாயிருந்தபோதிலும் அபேதத்தால் ஸாமீப பியத்தாலாவதுகாரணப்பிர்மமத்திலுபசரிக்கப்ப

டுகின்றன ஆதிதைவிக சாஸனகர்தாவான ஸகுணேசுவரனால்இலக்ஷிக்கப்பட்டபிர்ம்மமென்று நிச்சயிக்கவேண்டியது அது பார்க்கப்படாததாயிருந்தபோதிலுமெல்லாத்தையும்அதேபார்க்கின்றனவென்று பிர்மத்தைத் தவிர வேறாவஸ்துவில்லாத்தினலேயே அக்ஷரமாகும் (உ௰)அபரப்பிர்ம்மமானஓங்காரத்தால் தியானம்செய்யத்தக்கதுபரப்பிர்மந்தான்இந்தத்தியானமேஸமமியக்தெருசனத்துக்கு ஸாதனம்தியானுதிகளுக்கெட்டாத ஒரு அரூபப்பிர்ம்மமிருக்கின்றன அது சித்ரூபஸம்மியக்ஞானியின் தேகம் விழுந்தபின் பவிக்கப்போகிறபடியால் முமுக்ஷுகளுக்குஅதின் விசாரணையாலெவ்வளவும் பிரயோஜனமில்லை சிதானந்த ஸ்வரூபத்திலேயே பிரயோசனமிருக்கின்றன ஓங்காரத்தால் தியானம்செய்யத்தக்கனபுருஷன் விபுவாகையால்வெளிப்பட்டவனுமல்ல உள்பட்டவனுமல்ல (உ௧) இரதயபுண்டரீகபரிச்சேதமிருப்பதால் தகருத்மா பிரத்தியக்குத்தான் ஆகிலும் வெளிபூதாகாசத்துடன் னுபமானம் சொல்லப்பட்டிருப்பது முதலான மேல் ஹேதுக்கள் ஞல் பரமாத்மாவாகிருன் மைத்த பூதாகாசம் ஜீவனீசன் பிரத்தியகாத்மா இதுகள் தகரமாகாதுகள் ஆகாச பூமிகளுக்குகெதியும் பாபமில்லாமையும் காணப்படுகிறபடியால் லோகங்களுக்கு கலப்புவருமலிருக்கவேண்டியதற்கு அணைபோலிருக்கின்றபடியாலும் இந்தமகிமைஎல்லாம் பரமாத்மாவிடத்திலேயே கூடும்மாகையாலும் இதரனுன சுஷுப்த ஜீவனுடைய விசாரணையானது தள்ளவேண்டியதற்காகவேதவிர தாரணம்முதலான சொல்லியமகிமைஇல்லாத்தினல் கோள்ளவேண்டியதற்காகவில்லை மேல் சொல்லியபிரஜாபதிவாக்கியத்தாலும் சுஷுப்தனுக்குமேல் ஆவிர்பவித்த பரமாத்மாவே இவ்விடத்தில் மூன்று ஜீவவிசாரணையானது துரீயாத்மப் பிருப்திக்காக வேதவிர வேரில்லை சுஷுப்தப்பிருப்திக்காக இரண்டு ஜீவவிசாரணைஎன்று சுஷுப்தவாதிசொல்வது அஸத்துதான் (உ௨) இரதயபுண்டரீகத்தில்சொல்லப்பட்டபடியால் தகரன் அல்பனென்ருலகுத்தமில்லை தகருகாசம்போலென்று சொல்லப்பட்டிருக்குதல்லவா அந்த வஸ்துவில் ஸூரியன்முதலானது களெல்லாம்பிரகாசிக்கிரதுகளில்லைஎன்றுஸூரியாதிகள் அதைஅனுசரிக்கிறதுகளென்றும்அத்புதமானரூபம் சொல்லப்பட்டிருப்பதால் ஸ்மிருதியாலும்பரஞ்சோதியாகச்சொல்லப்பட்ட அது அகண்டபோதமான பரமாத்மாதான் (உ௩) சுருதியால் கட்டவிரலாகாரனுக சொல்லப்பட்டஹிரதயத்திலிருக்கிற புருஷன் பிரத்தியகாத்மாதான், பாதருயணரென்றவியாஸாசாரியர் தங்களுடைய கட்டைவிரல் பிரமாணமாக மனுஷியர்களுக்கு மேலான தேவர்களிடத்திலும் அந்தபுருஷன் அங்குஷ்டாகாரனென்று எண்ணுகிருர் பிறகு இந்திரன் முதலானதேவர்கள் குருஸேவைசெய்திருப்பதால்தேவாளுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமுண்டென்று எண்ணுகிருர் இந்திராதிகளுக்குத்தங்கள் சக்தியினுல் அநேக விகாரரூபங்க ளுண்டாகிறபடியால் பிரத்தியகாத்மாவுக்கு அப்படியே அநேக ஆகாரமிருப்பதாலும் தியான கர்மத்தில் விரோதமில்லை (உ௪) சுருதிஸ்மிருதிகளால் நாதத்தைபிரத்தியகாத்மாவிடத்திலுண்டாகிறதாக பெரியவாள்சொல்லுகிருர்கள் தன்ஞலுதிக்கிறபடியால் வேதாத்தியயனத்தில்தேவதைகளுக்கு விரோதமில்லை, பிரளயத்திலும்நாமரூபங்கள்ஸமானமாகையால்பிரத்தியகாத்மாவுக்கு நாதாதிஷ்டானத்துவம் நித்தியந்தான், சுஷுப்தியிலும் மகாப்பிரளயத்திலும்பேதமில்லை,(உ௫)தேவர்களுக்குமதுவித்தையில் அதிகாரமில்லாத்துனல்பிர்ம்மவித்தையிலும் அதிகாரமில்லை என்றுஜைமினி ஆசாரியரெண்ணுகிருர், ஆகாசத்தில்தேஜஸ்ஸுள்ளஸூரியனிடத்தில் தேவசப்தமிருப்பதால்அசெனங்களான தேவர்களுக்குசுருதியிலதிகாரமில்லைஎன்று எண்ணுகிருர், பாதருயண ஆசாரியர் சூரியாதிகளுக்குமதுவித்தையி லதிகாரமில்லாவிட்டாலும் பிரம்மவித்தையிலதிகாரம் காண்பிவிக்கப்பட்டிருப்பதால் தன்சக்தியால் மண்டலத்துக்குதேஜஸஸுக்கிடைத்திருப்பதாலும் செதனர்களேதவிர அசேதனர்களில்லை என்றெண்ணுகிருர் வருணுதிகளிடத்தில்தத்துவவித்தைகேழ்கிறபடியால் ஸ்வேசசாசரீரமுள்ளவர்களாகையாலும்அசேதனத்துவங்கூடாது, (உ௬) சூத்திரனுக்கும் வேதத்திலதிகாரமுண்டெ



ன்றுசங்கிக்கக்கூடாது, ஜானசுருதிஎன்றவன் ஸம்வர்கவித்தையில் சொல்லியபடி க்ஷத்திரயனுகையால்அவனுக்குபிரயோகிக்கப்பட்டசூத்திரசப்தமானது சோசத்தைஅடைந்தபடியால்யோகவிருத்தியால்ஸாக்குவமகரிஷியால் சொல்லப்பட்டுதேதவிர ஜாதிசூத்திரனில்லை, ஜானசுருதிக்குஉபனயனுதிஸம்ஸ்காரம் சொல்லப்பட்டிருப்பதால் ஜாதிசூத்திரனுக்கு அந்தஸம்ஸ்காரமில்லாதபடியாலும் சூத்திரனுக்குவேதத்தில் அதிகாரமில்லை, சூத்திரன் வேதத்தை சிரவ்ணம்செய்தால் காதுகளில் அரக்கை உருக்கி பூரணம்செய்யவேணுமென்றும் வேதத்தை உச்சரித்தால் நாக்கயருக்கவேணுமென்றும்மனதில்தரித்தால் மாரைப்புளந்துபோடவேணுமென்றும் ஸ்மிருதிஇருப்பதால் அதிகாரம் எவ்வளவும் இல்லை இதரபாஷைகள்னுலும் புருணஇதிகாஸங்களாலும் பிர்ம்மவித்தையை அடையலாம் (உ௭) அங்குஷ்டாகார ஆத்மவித்தானவன் புண்ணியபாபங்களை வுதருகிறபடியால் சூரியமண்டலத்தை அடையுகிறபடியாலும் கம்பனசப்தத்துக்கொதருகிறது அர்தமேதவிர பயப்படுகிறது பிரகிருதஅர்தமில்லை ஆகாசசப்தமும்யோகவிருத்தியால்விளங்குகின்றஸூரியனிடத்திலேயே ஆகும்சுஷுப்தியிலடையப்பட்ட அவித்தைக்குஉத்க்கிருந்தியிலடையப்பட்ட சந்திரப்பிருப்திக்கும்அன்னியமானஸூரியப்பிருப்தியல்லவா சொல்லப்படுகின்றன ஆகையால் சொல்லிய அர்தமேநியாயம் (உ௮) பதிமுதலானசப்தங்கள் கேழ்வியாகிறபடியால்ஸத்தியலோகாதிபதியான நாலுமுகப்பிர்ம்மாவானவர் ஈசுவரனேதவிர ஜீவனில்லை, முதலாவதுஉண்டானபடியால் ஜீவத்துவம் பிரசித்தமாயிருப்பது நிற்குணப்பிரம்மத்தை அபேக்ஷித்தாகையால் குத்தமில்லை, எப்படி பிதாவும் பிதாமகரை அபேக்ஷித்து புத்திரனே அப்படி அரியத்தக்கனது, பிர்ம்மாமாயோபாதிகரென்றும் ஜீவன் அவித்தியோபாதிகனென்றும்பிரசித்த மாகையாலும் பிர்ம்மா ஜீவனுக மாட்டார்(உ௯)இப்படி அப்பயதீக்ஷிதருல் மொழிபெயர்க்கப்பட்ட தத்துவ ஸாரூயண சந்திரிகையில் ஞானகாண்டத்தின் உ - வதுபாதத்தில் ௪-வது அத்தியாயம் முற்றிற்று.

## ௫-வது அத்தியாயம்.

கடவல்லியுபநிஷத்தில்சொல்லிய சரீரதம் முதலானவிசேஷமுள்ள ஸகுணப்பிரம்மமே அனுமானத்தால் அரியத்தக்கதென்ருல் அவ்யக்தத்துக்கு மேலானபுருஷனையே அரியவேணுமென்றுசொல்லியிருப்பதால் பிரத்தியகாத்மாவே அரியத்தக்கனவன், ஸகுணேசுவரன் பிரத்தியகாத்மாவின் னதீனனுகையால் ஈசுவரவாதத்தில் முமுக்ஷுகளுக்குபிரயோஜனமில்லை (௩௰) அக்கினிஜீவன் பிரத்தியகாத்மா இந்தமூன்றுபேர்களுடைய பிரச்சினமும் பிரதிவசனமும்இருப்பதால் அந்தப்பிரகரணமானது பிரத்தியகாத்மாவை சொல்லவந்ததேதவிரஈசனைச் சொல்லவரவில்லை ஜீவனையும் அனுவதித்துதேதவிர பிரதிபாதிக்கவில்லை, மகத்சப்தமானது ஜீவேசுவரபிரத்தியகாத்மாக்களி லெப்படிசொல்லப்படுகின்றனவோ அப்படி புருஷசப்தமுமாகும்ஆகிலுமெந்தசப்தத்துக் கெவ்விதமான அர்த்த மெவ்விடத்தி லுசிதமோ அப்படியே அரியவேணுமென்று வித்வான்களுடைய மதமாகையால் புருஷசப்தம் அவ்விடத்தில் பிரத்தியகாத்மாதான் (௩௧) யாகத் திருவவியவிசேஷமான சமஸஞ்ஞானம்போல் அஜாமந்திரத்தில்சொல்லப்பட்டசக்தியானது மாயையும்இல்லை தேஜஸ்ஸு அப்பு அன்னங்களுமில்லை, குணத்திரயவைஷம்மியமில்லாதபடியால் தேஜஸ்ஸுக்குமேல்பட்டபடியாலும், குணஸாம்மியமுள்ள பிரகிருதிதான் அந்தபிரகிருதிபுருஷர்களுக்கு அஜத்துவமானது ஸூரியனிடத்தில் மதுத்துவோபசாரம் போலாகும் (௩௨) ஐந்தைந்து ஜனங்களென்று பிரகதாண்ணியத்தில் சொல்லியது இருபத்தைந்து தத்துவவிஷயமேதவிர ஐந்து புருஷர்கள் விஷயமில்லை, பிருணனுக்குபிருணனென்றதில் ஸங்கியயின் கூடுதல்ஞல் இருபத்தஞ்சேசித்தித்தது, தகருகாசத்தைவற்ணி

த்தபடியால் ஆகாசமதிகமென்றகுத்தமுமில்லை, காண்வர்கள் அன்னமென்ற பிரதிவியைச்சொல்லாவிட்டாலும் ஜோதியைச்சொல்லியிருப்பதாலதினுலே சங்கியைபூர்ணமாச்சுது, தைத்திரியோபநிஷத்தில் சொல்லப்பட்டிருப்பதாலாகாசவாயுக்களையும் காரணமாக எடுத்துக் கொள்ளவேண்டியது தொண்ணூத்தாரு தத்துவங்களுக்கே சுருதிப்பிரமாண மிருக்க இருபத்தாரு தத்துவத்துக்கு சுருதிப்பிரமாணமில்லைஎன்பதற்குசுருதிப்பிரமாணமில்லை, (ஙங) அபரோக்ஷமாக அரியத்தக்கனவன்பரமாத்மாவென்று சொல்லியகௌஷீதகி உபநிஷத்தில் ஜகத்சப்தத்தினுல் சொல்லப்பட்டபிரத்தியகாத்ம புருஷர்களுக்குக்கர்த்தாபரன்தான், பிரத்தியக்பருளிரொண்டுபெயர்களும் ஒன்றுக்கொன்று புசிக்கிறவர்களாயிருந்தபோதிலும்பரன்அவினுசியாயிருக்கின்ருன், ஜீவனுக்கும்முக்கியப்பிருணனுக்குமாத்திரம் அடையாளமிருக்குதென்றுசங்கிக்கவேண்டாம் மூன்றுஉபாஸனைஎன்றுமுன்னமேசொன்னேமல்லவா, ஸுஷுப்தஜீவப்பிருப்திக்காகவே ஜீவப்பிருணபருமர்சமென்ருல் பிரம்மத்தைச்சொல்லுமென்ற பிரசினத்தாலும் ஸுஷுப்ததிருஷ்டாந்த உத்தரத்தாலும் துரியாத்மபிருப்திக்காகவென்று ஜைமினி ஆசாரியரொண்ணுகிருர், ஸுஷுப்தனேநிற்குணப்பிரம்மமென்று சிலர்கள்சொல்லுகிருர்கள் அதுசுருதியுக்தி அனுபவங்களுக்குரொம்பவும்விருத்தமாகையால் யுக்தமில்லை (ஙச) பிரகதாரண்ணிய உபனிஷத்தில் சொல்லிய தெருசனசிரவணமனன நிதித்தியாஸனவாக்யான்னுவயத்தால் முன்பின்யோசனைசெய்வதில் பரமாத்மபிருப்திக்காகவே அந்ததெருசனுதிவிதிகளென்று நிச்சயமாகின்றன, உபக்கிரமத்தில் விஞ்ஞானுத்மாவானஜீவனைசொல்லியிருந்தபோதிலும் அவனைஅனுவதித்துஉபஸம்காரத்தில் பரனைசொன்னதாக அரியும், பச்சமஞ்சள்போல் முன்சொல்லப்பட்டரூபம்பாத்தியகாத்மாவுக்கேதவிரஜீவனுக்கில்லை. முதல்தெருசனத்தில் விஷயப்பட்ட அணுஜோதியான பிரத்தியகாத்மாவுக்கு விபுத்துவம் ஸித்திக்கவேண்டியநிமித்தியம் சிரவணம்விதிக்கப்பட்டுது நிதித்தியாஸனத்துக்குமனனம்எப்படிஸாதனமோமனனத்துக்குசிரவணமெப்படிஸாதனமோ அப்படிசிரவணத்துக்கு தெருசனமும் ஒருஸாதனமேதவிர சிரவணுதிகளால்ஸாதிக்கத்தக்கனதெருசனமேமுந்தியதென்றது ரொம்பவும் அயுக்தம், யாஞ்ஞவல்க்கியமகாரிஷியானவர்தன் பாரியானமைத்திரெயிக்கு அமிருதத்துவத்தை அடையுகிறதர்காகச் சொல்லியஸாதனங்களை ஜீவப்பிருப்திக்கென்று எப்படிசொல்லலாம், இதிலொருவனை அரிந்தால்சகலமும் அரியப்படுமென்றசுருதிப்பிரதிஞ்ஞை இருப்பதால் ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு அபேதமென்று ஆச்மரத்திய ஆசாரியரொண்ணுகிருர், ஸம்பிரஸாதசுருதியால் தேகத்திலிருந்துகிளம்பிபரஞ்சோதியை அடையுகிறதாகச் சொல்லிஇருப்பதால் அபேதமென்று ஔடுலோமி ஆசாரியரொண்ணுகிருர்பரமாத்மாவே ஜீவனுகதேகத்தில் பிரவேசித்திருப்பதால் அபேதமென்று காசகிருத்ஸன ஆசாரியரொண்ணுகிருர் இதில்ஸம்ஸாரநிவிருத்திகாலத்தைப்பத்திச் சொல்லியபடியால் ஔடுலோமிமதமேமுக்கியமாகும், ஸம்ஸாரப்பிரவிருத்திகாலத்தைப்பத்திச் சொல்லியபடியால் ஔடுசகிருத்ஸனமதம்ஸாமான்னியந்தான், சுருதிப்பிரதிஞ்ஞைஸித்திக்காகவென்று சொல்லியபடியால் ஆச்மரத்தியமதத்தில் கொஞ்சம்பேதம் அபிப்பிருயப்படுகின்றன பரன்பிரவேசியாமலிருப்பதாலென்றுஸூத்திரமில்லாததுனுல் முக்காலத்திலும்அபேதத்தில்காசகிருத்ஸனருக்குமதமென்றவியாக்கியானம்சரியல்ல, வியவகாரதெசையில் ஜீவன்வேரையாகவேஇருப்பதாலுத்பத்திக்குமுந்தியஅபேதத்திலவருக்கு அபிப்பிருயமென்றரியவேண்டியது (ஙரு) வஸ்துஎகமென்றபிரதிஞ்ஞைதிருஷ்டாந்தத்துக்கு தடைவருமலிருக்கவேணடியதற்காக நிமித்தகாரணமான பிரம்மத்தைத்தவிர பிரகிருதிவேரொஇல்லை என்றுசொல்லப்படுகிறது, ஜீவனுக்குபாதானகாரணமானபிரகிருதியையும் நிமித்தமே உண்டுபண்ணினபடியால் நிமித்தகாரண உபாதானகாரணங்களுக்குபேதமும்மோக்ஷஅவஸ்தையில் உபாதானத்தைமர்தித்து நிமித்தம்சேஷிக்கிறபடியால்அபேதமும்கூடும் பிரம்மமேசக்ஷணம்பண்ணி தன்னையேபிரபஞ்சமாகச்செய்ததாகசுருதி



சொல்வதால் பிரம்மமே இரெண்டுகாரணமாச்சுது, பிரகிருதிக்குபாதானமாயும் ஜீவனுக்கு நிமித்தமாயும் பிரம்மத்தைச்சொன்னதுனுல் அபின்னநிமித்தோ பாதானகாரணவாதம் சித்திக்கவில்லையேயென்ருல் என்னசெய்யலாம் அவளவுதான் அபேதவாதிகளுக்கிடம்கிடைக்கும் பிரம்மத்தின்பிரகிருதிதான் காரியரூபமாக ஆச்சுதேதவிர பிரம்மமாகவில்லை, பிரம்மமே ஆச்சுதென்ருல் அப்போதுகாரியப்பிரபஞ்சத்துக்கு நாசம்காணுகிறபடியால் பிரம்மத்துக்கே அந்தநாசம்நேரிடும் ஆகையால் பிரம்மத்தின் ஒருசக்திதான் ஜீவனுகபரிணமித்துதேதவிர நிமித்தகாரணமான பிரம்மம்பரிணமிக்கவில்லை, பிரம்மத்துக்குயொநிசப்தமும் நிமித்தார்தமேதவிர உபாதானர்தமில்லை, ஆகையால்காரணுதீதவஸ்துவைச் சொன்னதாக சங்கிக்கவும்வேண்டாம் இந்தநிர்விசேஷப் பிரம்மகாரணவாதத்தால் மாயாப்பிரதான அணுமுதலானகாரணவாதிகள் எலலோரும் தள்ளப்பட்டார்களென்றரியத்தக்கனது (ஙகூ) இப்படி அப்பயதீக்ஷிதருல்மொழிபெயர்க்கப்பட்ட தத்துவஸாருயணசந்திரிகையில் ஞானகாண்டத்தின் - உ - வது பாதத்தில் ரு - வது அத்தியாயம் முற்றிற்று.

## கூ-வது அத்தியாயம்.



சித்ரூபப்பிரகிருதிக்குகாபிலஸாங்கிய ஸ்மிருதியில் அவகாசமத்தபோதிலும்இதரஸ்மிருதியிலவகாசமிருக்கின்றன, அவியக்தமென்ற பிரதானத்துக்கு ஜீவகாரணத்துவமில்லாததுபோல்மகத்துமுதலான்னதத்துவங்களுக்கில்லாமைனுல் அந்தகாபில்ஸாங்கியமதம்அச்சுரோளதமென்றுதள்ளப்பட்டுது, இதுனுல் யோகமதஸ்தனும் தள்ளப்பட்டான் இரெண்டுபேர்களாலுமடையப்படுகிற ஸ்தானமொன்ருகையால் அவேதிகளாகிலும் கிரமமுக்தியுண்டு, ஸத்தியோமுக்திஇல்லாதபடியால் தள்ளப்பட்டார்கள் (ஙஎ) ஞாஞ்ஞானபேதசப்தத்தால் ஜீவன்பிரம்மவிலக்ஷணனுகையால் பிரம்மப்பிரகிருதிகாரியனென்று சொல்லக்கூடாது, பூமிசொல்லித்து ஜலம்சொல்லித்தென்றவிசேஷமும் அக்கினிவாக்காச்சுதென்ற கெமனமும் அபிமானதேவதையின்காரியமாகையால் பூமிஜலம்முதலானதுகள் அசேதனங்கள்தான், இப்படிஇருபபதால் சேதனுசேதனங்களான பிரம்மஜீவர்களுக்குக்காரிய காரணத்துவங்கூடாதென்ற சங்கைக்கு உத்தரம் ஜீவன்மோகாதிவிசேஷாம்சத்தால் பிரம்மவிலக்ஷணனுகயிருந்தபோதிலும் ஸச்சிதானந்தாம்சத்தால் அவிலக்ஷணனுக இருப்பதால்காரியகாரணத்துவம் சித்தித்துது, காரியத்தின் நிஷேதார்தமாக உத்பத்திக்குமுன் அஸத்தென்றுசொல்லப்பட்டுதேதவிர அம்லாத்மாவான காரணத்துக்கு அஸத்துவத்தைச் சொல்லவந்ததில்லையாகையால் உத்பத்திக்குமுன் ஜீவகாரணம் அஸத்தென்றதில்லை, இதுனுல்ஸத்காரியவாதிக்கு அனிஷ்டம்தன்னுல் ஸித்தித்துது கஷ்டம்சப்தம்முதலானதத்தது காரணம்சப்தம்முதலானதுள்ளதுகாரியமென்ரிப்படிஇருக்கஇரெண்டும்ஸத்தென்றுஸமமாக எப்படிசொல்லலாம், ஜீவனுடைய அழுக்கானது மோக்ஷாவஸ்தயில்பிரம்மத்தைகெடுக்குமென்றகுத்தம்மண்குடம்முதலான்திருஷ்டாந்தத்தால்வருது, பிரதானவாதிக்கும் ஸுஷுப்தவாதிக்கும் மோக்ஷத்தில் அந்தகுத்தம்வருமேதவிர துரியாத்மவாதியான நம்முடையபக்ஷத்தில்வருது, இதில்சுருதியுக்தியனுபவத்தால் சங்கையுத்தரத்துடன்காரியகாரணவாதத்தை நிற்ணயிக்கிருேம், நித்தியாநித்திய விவேகம்முதலான நாங்குசாதனம் பொரிந்தியஅதிகாரியாலிந்தஜீவனுடைய உத்பத்திஸ்திதிலயங்களுக்கு காரணமானப்பிரம்மமே அரியத்தக்கதென்றுசகலவேதாந்தங்களுடையகருத்து "சங்கை" ஜீவன்சுகதுக்கபோகாதிகளுடன்கூடியிருப்பதால் பிரம்மம்சுகதுக்கபோகாதிகளத்து ஸச்சிதானந்த ஸமரஸஸ்வரூபமென்று சருவசாஸ்திரப்பிரசித்தமாயிருப்பதாலும் காரணுரூபமாகவே காரியமிருக்கவேணுமென்று நியாயமிருப்பதாலும் ஜீவனுக்குப் பிரம்மம்காரணமென்று சொல்வது சரியில்லை,

"உத்தரம்" சொல்லியலக்ஷணமுடையகாரிய ஜீவன்காரணனனுரூபனாக இருப்பது நியாயந் தானென்றால் காரியகாரணங்களுக்கு வியவகாரதெசையில்பேதம் சித்திக்கவேண்டியநிமித்தி யம் விசேஷமிருக்கிறது யுக்தமல்லவா "சங்கை" பரமார்த்ததெசையில் அபேதம்சித்திக்க வேண்டியநிமித்தியம் அவிசேஷமிருக்கவேணுமே "உத்தரம்" பரமார்த்தஜீவனாகிய கூடஸ்தகாரி யத்துக்கும். பிரம்மத்துக்கும் அவிசேஷமிருப்பதால் அனுரூப்வாதத்துக்கு விரோதமில்லை, பே தாபேதோபயவாதமும் சித்தித்தது "சங்கை" வியவகாரஜீவனுக்குகாரணம் பிரம்மமல்லவோ "உத்தரம்" வியவகாரஜீவனுக்கனுரூபமான அவித்தைஉபாதானகாரணமாயிருந்தபோதிலும் விலக்ஷணமானபிரம்மம் நிமித்தகாரணமாகையால் பிரம்மம்காரணமில்லை என்றுசொல்லக்கூ டாது "சங்கை" காரியபேதத்தால்காரணமுமிரொண்டாகபேதிக்குமாகில் அதுவைதசுருதிகளு க்குகேடுநேரிடுமே, "உத்தரம்" காரணம்ஸதஸதாத்கமாக ஒன்றாகவேஇருப்பதால் சொல்லிய கேடில்லை, துவைதாத்துவைதோபயவாதங்களும் சித்தித்துதுகள், "சங்கை" காரணம்ஸதஸதாத் மகமானால் காரணப்பிரப்திஸ்வரூபமான மோக்ஷத்தை அடைந்தவர்களுக்கு புனர்ஜன்மம்நே ரிடுமே, அப்போது மோக்ஷசாஸ்திரமுபயோகமத்ததாகுமே "உத்தரம்" உத்பத்திகாரணம் ஸத ஸதாத்மகமாக இருந்தபோதிலும், லயகாரணம் ஸத்மாத்திரமாகையால் மோக்ஷசாஸ்திரம் ஸபலந்தான், பெந்த மோக்ஷங்களுக்கு பேதமிருக்கவேண்டிய நிமித்தியம் உத்பத்திலய கார ணங்களை பிரித்துச்சொல்வதும் யுக்தந்தான் "சங்கை" உத்பத்திக்குமுன் ஸத்தேகாரணமெ ன்று அல்லவாசுருதி சொல்லுகின்றன, அப்படி இருக்க ஸதஸதாத்மகமுத்பத்தி காரணமென் றுள்ளபடிசொல்லலாம் "உத்தரம்" ஜீவ உத்பத்திக்குமுன் ஸத்தேநிமித்த காரணமாகையால் கூடஸ்த உத்பத்திக்குமுன் ஸத்தேநிமித்த உபாதான காரணமாகையாலும் சுருதிவசனம்சரி தான், உத்பத்திக்குமுன் அஸத்தேகாரணமென்று சொல்லியசுருதிக்கு ஜீவோபாதானகாரண விஷயமாகையால்குத்தமில்லை, சாஸ்தரப்பிரஸித்தங்களான ஸத்காரியவாதம் அஸத்காரியவா தம் ஸத்காரணவாதம் அஸத்காரணவாதமிந்த நாங்கு வாதங்களும் சரியாக சித்தித்துதுகள் "சங்கை" அஸத்காரணவாதமும் சாஸ்திரஸம்மதமானால் காபிலஸாங்கியமதமும்வைதிகமா குமே "உத்தரம்" அஸத்தாயும் அசேதனமாயுமுள்ள பிரதானத்துக்கு ஈக்ஷிதிருத்துவம் சித்திக்க இடமில்லாமையால் ஸாங்கியமதம் வேதவிருத்தந்தான், "சங்கை" சேதனமான பிரம்மத்துக்கு சரீரம் நேத்திரம் மனதுமுதலானதுகளில்லாத்தால் வீக்ஷிதிருத்துவங்கூடாதே "உத்தரம்" காத்து அலையுவதுபோல் பிர்ம்மத்துக்கு சிச்சக்தி விலாஸமே இக்ஷணமாகை யால் குத்தமில்லை "சங்கை" சிச்சக்திவிசிஷ்டமாகப்பிர்மத்தை ஒப்புக்கொண்டசாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட விசிஷ்டாத்வைதிகளுக்கிடமுண்டாகுமே சாஸ்த்ரப்பிரஸித்தமான நிர்வி சேஷாத்துவைதிகளுக்கு விரோதமும் நேரிடுமே "உத்தரம்" சரீர இந்திரியாதிகளுடன்கூடிய மூர்த்தியைதானே பரபிர்ம்மமென்று விசிஷ்டாத்துவைதிகள் சொல்லுகிறபடியாலந்தவாதத் துக்கிவ்விடத்திலிடமில்லை, ஸர்வசக்தியுமத்த ஸத்தாஸாமான்னிய அரூபப்பிர்மத்துக்கீக்ஷி திருத்துவம் ஸித்திக்க இடமில்லாமையால் அரூபநிர்விசேஷாத்துவைதிகளுக்கு மிடமில்லை, "சங்கை" பிர்ம்மா விஷ்ணு ருத்திரனென்ற இவ்வித நாமரூபங்களுடன் விசிஷ்டாத்துவைதி களால் சொல்லப்பட்ட ஸவிசேஷமூர்த்தப்பிர்ம்மம் காரியமா அல்லதுகாரணமா "உத்தரம்" சராசரஜகத்துக்குக்காரணமாயும்ஜீவனுக்குக்காரியமாயும்சொல்லப்படும் அதுபோகாபேக்ஷைய் யுள்ளவர்களாலும் சித்தசுத்திஅபேக்ஷையுள்ளவர்களாலும்உபாஸிக்கத்தக்கனவஸ்துவாகையா ல் நிஷ்காம சுத்த சித்தர்களான அதிகாரிகளால் அபேக்ஷிக்கத்தக்கதில்லை "சங்கை" ஈசுவரனே ன்ற அந்த ஸகுணப்பிர்ம்மம்கைவல்யமோக்ஷஸ்வரூபமில்லாவிட்டாலும் ஜீவனுடைய போக த்துக்கும்சித்த சுத்திக்குமாவதுகாரணமாயிருப்பதால் அதைஜீவனுக்கு காரியமென்று எப்படி சொல்லலாம் "உத்தரம்" அவிவேகியான ஆபாஸ ஜீவனுக்கு அந்தச்சகுணப்பிர்ம்மமுபாஸிக்



கத்தக்கதாயிருந்தபோதிலும் விவேகியான கூடஸ்த ஜீவனுக்கு சேஷமாகையால் சேஷியான ஜீவன் காரணமென்றும் சேஷமான ஈசுவரன் காரியமென்று மூரிதியாகவே சொல்லலாம் "சங்கை" ஜகத்காரணம் ஈசுவரன் ஈசுவரகாரணம் ஜீவன் ஜீவகாரணம் பிர்ம்மமென்றிப்படி காரியகாரணங்களை நிரூபித்தால் அனேக நியாயங்களுக்கு விரோதிக்கும் எப்படிஎன்றால் ஜீவ ன் கிஞ்சித்ஞனென்றும் ஈசன் ஸர்வஞ்ஞனென்றும் பிரசித்தமான அர்த்தம் பாதிக்கப்படுமீச னுக்கு ஜீவன்காரணமாகில் அப்போதுஈசனை காட்டிலும்ஜீவன் அதிகசக்தியுள்ளவனாகவேணு மே அப்படியானாலனேக கிரிநதீஸமுத்திராதி ரூபமான பிரபஞ்சத்தை ஜீவன் ஸிருஷ்டிக்க வேணுமே அப்படிப்பட்டவல்லமையை ஜீவனுக்கு காணோமே "உத்தரம்" பரப்பிர்ம்மாம்ச னாகிய கூடஸ்த ஜீவன் தானே ஈசுவரனாக பரிணமித்து பிரபஞ்சத்தைஸிருஷ்டித்தபடியால்ஜீவ னே சர்வவல்லமையுள்ளவனென்று நிருக்ஷேபமாகவேசொல்லலாம் இந்தகூடஸ்தஜீவனுடைய பிரதிபிம்பனான ஆபாஸ ஜீவனுக்கு அஞ்ஞான ஆவரணவிக்ஷேபசக்திகளுடைய நிர்பந்தமிருப் பதால் அவன் கிஞ்சிஞ்ஞனாக இருப்பது யுக்தந்தான் இவனை ஈசனுக்கு காரணமென்று நாம் சொல்லவில்லை "சங்கை" ஜிவேசுவரருளிரண்டுபேர்களும் கூடஸ்தனுடைய பிரதிபிம்பமாக இ ருக்க அதிலொருவன் கிஞ்சித்ஞனும் ஒருவன் சர்வஞ்ஞனும் இருக்கக் காரணமில்லையே, "உத்தரம்" சுத்தசத்துவகுண பிரதானையானமாயையால்பிரதிபிம்பித்தபடியாலீசன்ஸர்வஞ்ஞ னாகவும்மலினஸத்துவகுணப் பிரதானையான அவித்தையில் பிரதிபிம்பித்தபடியால்ஜீவன் கிஞ் சித்ஞனாகவும்பவித்திருப்பதாலுபாதிரூபத்தால் ஜீவேசுவரபேதம் கூடும் ஈசனை ஸர்வஞ்ஞனெ ன்றுசொல்வதுப் ஔபசாரிகமேதவிரபாரமார்திகமாகக்கூடஸ்தஜீவன் தான்ஸர்வஞ்ஞன் பரப் பிரம்மத்தை அபேக்ஷித்து கூடஸ்தனுக்குஔபசாரிகந்தானென்று சொன்னால்அதுநமக்குஇஷ் டந்தான் அரூபப்பிர்ம்மத்தை அபேக்ஷித்து சித்ரூபப்பிர்ம்மத்துக்குஸர்வஞ்ஞத்துவமௌபசா ரிகந்தானென்று சொல்வதுஸரியில்லையேயென்றால் ஸர்வவல்லமையத்துவாக்குக்கும்மனதுக் கும்எட்டாத நிர்குணாதீதமான அந்தஅரூபவஸ்துவை எப்படி வியவகரிக்கக்கூடும் "சங்கை" ஈச னுக்கும் கூடஸ்தனுக்கும்சொல்லியதுபோல் சித்ரூபப்பிர்மத்துக்கும் அரூபப்பிர்ம்மத்துக்கும் காரியகாரணத்துவமிருப்பதால் சித்ரூபத்துக்குஸர்வவல்லமைஔபசாரிகமென்றும்அரூபத்து க்குபரமார்த்தமென்றும் சொல்லலாம் "உத்தரம்" ஸர்வவல்லமையத்த ஒருமுடிவானவஸ்துவை ஒப்பாதபக்ஷத்தில் முக்தர்களுக்கும் திரும்ப ஜன்மம் நேரிடுமென்றுசொன்னோமே ஆகையால் பரமார்த்தமாக சர்வவல்லமையுள்ளது சித்ரூபப்பிர்மமேதவிர வேறில்லை சித்ரூபப்பிர்மமேஸர் வகாரணமாகையாலதுகாரியமாகாது அரூபப்பிர்மமும் காரணாதீதமாகையால் காரணமாகாது "சங்கை" சித்ரூபப்பிர்மத்தினிடத்தில் பிறவிருத்தி சக்திநிவிருத்தி சக்திஎன்ற இரண்டு சக்தி களுமிருப்பதால் பிரவிருத்திசக்தியால் பெந்தம் நேரிட்டபோதிலும் நிவிருத்திசக்தியால் முக் தர்களுக்கு திரும்ப ஜன்மம் வர இடமில்லாமலிருப்பதால் சர்வசக்தியத்த ஒருவஸ்துவை ஒப் புக்கொள்ளவேணுமென்று தீர்மானிக்கக்கூடாது "உத்தரம்" பிரவிருத்திசக்தியைநசிப்பிவிக்கி றதர்க்காகவே நிவிருத்திசக்தியிருப்பதால் பிரவிருத்தி சக்திநசித்த ஸமகாலத்தில் தேத்தாங்கொ ட்டைபோல் வெரகு நெரிப்புப்போலவும் நிவிருத்தி சக்தியும் நசித்துப்போய் விடும் அது நசி யாதவரை பிரவிருத்தி சக்தியும் நசியாது ஆகையால்முக்தர்களுக்குதிரும்பஜன்மம்வராமலிருக் கவேண்டியநமித்தியம்ஸர்வசக்தியத்த ஒருவஸ்துவை ஒப்புக்கொண்டேதீரவேணும் "சங்கை" அரூபப்பிர்ம்மமே சேஷிக்கிறவஸ்துவாகையாலதேசித்ரூபப்பிர்மத்துக்குகாரணமென்றுஅவ ச்சியம் சொல்ல வேணும் இப்போது காரியகாரணேபயாதீதவாதத்துக்கு மிடமில்லை காரண மாயுள்ளது ஜனகமாகையால் அதுவும்சக்தியுள்ளதாகவே இருக்கவேணும் அப்போது அனவ ஸ்தாப்பிரஸங்கமும் அனிர்மோக்ஷப்பிரஸங்கமும் நேரிடுமே "உத்தரம்" சித்ரூபப்பிர்ம்மம் ஜடரூபத்துடன் தன்னால் நசிக்கிறதேதவிர அதை அரூபப்பிர்ம்மம்நசிப்பிவிக்கிறதென்றுஎண்

ணக்கூடாது ஒருவன்புத்தி பூர்வமாககிணத்தில்விழுந்துமரித்தால் கிணர்கொன்று விட்டுதென்
றுசொல்லக்கூடுமோ அப்படிப்போல் அரூபப்பிர்மம் சித்ரூபப்பிர்மத்தைஉண்டுபண்ணித்தெ
ன்றுவது நசிப்பிவித்ததென்றுவதுசொல்லவேகூடாது; அக்காலத்திலும்சேஷித்தவஸ்துவாகை
யால்காரணமென்று உபசாரமாகச்சொல்லப்படுகின்றதே தவிர பரமார்தமாக காரியகாரணோ
பயாதீதந்தான் சர்வசக்தியுமத்திருப்பதாலனவஸ்தாப்பிரஸங்கம்முதலானகுத்தங்களுக்குமிட
மில்லை, ஜீவன் முக்தர்களுடைய பிராரப்ததேகம் நசித்தபின் சேஷிக்கத்தக்கதான அந்தஅரூப
வஸ்துவை ஜீவன் முமுக்ஷுக்களுக்கு உபதேசிப்பதும் வீண்தான் "சங்கை" வைனாசிகர்கள்
வைசேஷிகர்கள் ஸௌகதர்கள் விவஸனர்கள் பாஹியார்தவாதிகள் விஞ்ஞானவாதிகள் பாஞ்சரா
த்திரிகள் பாசுபதர்கள் முதலான அனேகமதஸ்தர்கள் ஒவ்வொருவிதமாக காரியகாரண விசா
ரணை செய்திருக்கிறதாக கேழ்வியாகிறதே அது விபரங்களை நன்றாக அரியவேண்டியதில்லை
யோ, "உத்தரம்" சொல்லியவாதிகளைப்போலின்னம் அனேகவாதிகளுண்டு அந்தமதங்களின்
விபரங்களை எழுதத்துடங்கினால் சாஸதிரம் விஸ்தாரமாகுமேதவிர முமுக்ஷுக்களுக்கு முக்கிய
உபயோகமில்லாமையால் ஸகலஸாரும்சச்சுருக்கமான இந்த அதிகரணத்தில் சொல்லப்படுகி
றகாரியகாரண விசாரணையே மோக்ஷத்துக்குப்போதுமானதா இருக்கின்றன இப்படி இருந்த
போதிலும் மந்தாதிகாரிகளுக்கு வேண்டியம்மதங்களை வியாஸாசாரியாவர்கள் சொல்லியபடி
மேலத்தியாயங்களில் தக்ஷிணாமூர்த்தியால் பிர்ம்மாவுக்கு உபதேசிக்கப்படுகின்றன இப்படி
பிரஸங்கத்தால் வந்த வியவகாரத்தை முடிப்பி வித்து பிரகிருதத்தை அநுசரிக்கிறோம் (கூஅ)
தர்க்கத்துக்கு நிலை இல்லாததினால் காரியதர்மத்தினால் பிரளயத்தில் காரணம் கெடுக்கப்படா
ததுபோல் ஸ்திதிகாலத்தில் காரணதர்மத்தினால்காரியமும்கெடுக்கப்படமாட்டாதென்றிப்படி
அன்னியதாவாக அனுமானிக்கத்தக்கதென்றால் இப்படி இருந்தபோதிலும் மோக்ஷமில்லாமல்
போகிறபடியால் கெட்டதர்க்கங்களைத்தள்ளி நல்லதர்க்கங்களைசுருதியுடன்செய்வதில்பலமுண்டு
இப்படிஸாங்கிய ஸத்காரியவாதிகளை தள்ளினதினால் ஸர்வ விஷயத்திலும் சிஷ்டர்களால் பரிக்
கிரகிக்கப்படாத அணுமுதலான காரணவாதிகள் நிருகரணகாரணம் துல்லியமாகையால்நிராகரி
க்கப்பட்டார்களென்று அரியத்தக்கது ஆகையால் எங்கும் ஸூக்ஷ்மபுத்தியால் வைதிக அம்
சங்களை கிரகிக்கவேண்டியது (கூகூ) இந்ததேகத்தில் பரமாத்மாவே ஜீவனைகப்பிரவேசித்திரு
ப்பதால் பரனுக்கேபோகம சித்திக்கிறபடியாலும் ஜீவபரவிபாகமில்லையென்றால்கேளும் உலகத்
துக்கும் ஈசனுக்கும் போல் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் விபாகமிருப்பதால் ஜீவனுக்
கு போகமேதவிர பரனிக்கில்லை பிரம்மத்துக்கு ஏகதேசாம்சத்தால் பிரவேசம் சொல்லப்ப
ட்டிருக்கின்றனவே தவிர பூருவாக இல்லை ஆகையால் ஜீவனுடையபோகத்தால் பரன் போக்
தாவாகமாட்டான் ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு பரமார்ததசையில் அபேதமேதவிர வியவ
காரதசையில்பேதம்சித்தித்திருக்கின்றன (சய) ஜீவன்பெந்தாவஸ்தையில் பரனைத்தவிர அன்
னியனாகஇருந்தபோதிலும் வாசாரம்பணசுருதிமுதலான ஹேதுக்களால மோக்ஷாவஸ்தையில்
அனன்னியந்தான் ஜீவபரருக்கு பெந்தமோக்ஷங்களை அபேக்ஷித்து பேதாபேதங்களிருக்குது
கள், அதாகநீ ஆகப்போகுறு யென்று மகாவாக்யார்த்தைதீர்மானித்திருக்கிறோமல்லவா,இதில்
முன்சொல்லியஔடுலோமியாசாரியருடைய மதமே அனுகூலமாகும்காசகிருத்ஸ்ன ஆசாரி
யருடையமதம் ஜீவோத்பத்திக்கு முந்தியகாலத்தை அனுசரித்த அபேத விஷயமாகையால்
அனுகூலமில்லையென்றுசொன்னோமே இந்தசுருதியாலாரம்பவாதம்சொல்லப்பட்டதென்றுசங்கி
க்கவேண்டாம்மிருத்திகையேஸத்தியமென்று பிரளயங்காணப்படுகிறபடியால் மோக்ஷாவஸ்த
யைப்பத்தினதுதான், உத்பத்திக்குமுன்னும்பிரளயத்துக்கு பின்னும்மத்தியகாலத்திலும்காரண
த்துக்கிருப்புகாணுகிறபடியால் அபரனை இந்தஜீவனுக்குமுன்காரணமாக இருப்புகிடைத்தி
ருந்தபடியாலும் பிரளயத்திலும்வெகுசுருதியால்காரணனன்னியத்துவம் சொல்லப்படுகின்ற



ன,காரியகாரணங்களுக்குமகாவாக்கியங்களாலைக்கியம்சேழ்வியாகிறதினாலும்அனன்னியத்துவ
ம் சித்தித்தது(சக) இந்தப்பிரபஞ்சம் முன்னஸத்தாச்சுதென்றுசுருதியால்காரணம்அஸத்தாக
க்காணுகிறபடியால்ஸத்தாகாதென்றால்வாக்கியசேஷபெலத்தால் காரியத்திற்குஅஸத்துவத்தை
உபபாதிக்கிறபடியால்ஸத்ஸ்வரூபமானதர்மத்தால் அந்தஸத்துவமுபபாதிக்கப்படுகின்றன,மு
ன்னெது அஸத்தோஅதுஸ்திதியில் ஸத்அதேபிரளயத்தில்அஸத்தாகிகாரணத்தைத்தவிரவேரில்
லாமலாகின்றன ஆகையால்காரணம்ஸத்தென்று நிலைத்தது,லௌகிகம்வைதிகமென்றுஇரெண்டு
விதம்ஸத்துசொல்லப்படுகின்றன அதில்வைதிகஸத்தானதுமுன்னும்மோக்ஷத்திலுமிப்பவும்ஸ
மந்தான், லௌகிகஸத்தானதுமுன்னும் மோக்ஷத்திலும் ஸமமாயிருந்தபோதிலும் இப்போது
நாமரூபங்களுடன் கூடியிருப்பதால் அஸத்தாச்சுது அதினால்வைஷம்மியம்வந்தது, எப்படி
அஸத்தானதயிருக்குமுன்க்ஷீரரூபமாக இருப்பும் அனன்னியத்துவமும் ஸித்தித்திருக்கின்றன
வோஇப்படியுக்திக்கும் சப்தத்துக்கும் சரியாயிருக்கின்றன, எப்படியெனில், வஸ்திரம்போல்
பிராணதிபோலவும் காரணத்தைத்தவிர காரியம்வேறாஇல்லை, இந்ததிருஷ்டாந்தங்களால்சுரு
திபில்சொல்லிய ஏகவிஞ்ஞானபிரதிஞ்ஞைசித்தித்தது,(சஉ)தானேஸிரிஷ்டித்துதானேஸம்ஹ
ரித்தென்றசுருதியில் பிரம்மத்தைத்தவிரவேறாயாகச்சொல்லப்பட்ட சுவப்னஜீவனே காரண
மாவான்இப்படி அன்றியில்பிரம்மமேகாரணமென்றால் அப்போதுபிரம்மம்சுவாதந்திரிய மில்
லாமல்தனக்குஹிதத்தைச்செய்துகொள்ளாமை முதலானகுத்தத்துக்கிடப்படுமென்றால் ஜீவ
னுக்கதிகமுள்ளவனுக்கல்லவா ஸிருஷ்டிகர்திருத்துவம் முதலானது அரியப்படுகின்றன,
பிரம்மம்நித்தியதிருப்தியுள்ளதாகையாலதுக்கு தள்ளத்தக்கன அகிதமாவது செய்யத்தக்கன
ஹிதமாவது ஒருஇடத்திலும்எவ்வளவுமில்லை, பார்க்கிறவன் ஜீவனென்றும்பார்க்கத்தக்கனது
பிரம்மமென்றும்பேதநிர்தேசமிருப்பதால் அதமமத்தியம உத்தமமானகல்லுக்கள் லோகத்
தில்காணுவதுபோல் ஜகத்ஜீவ பரமாத்மாக்களுக்குபேதமரியத்தக்கனது (சங) ஸூஷுப்த
னிடத்திலிருந்து உபக்கிறமித்தவிகாரங்களுக்கு அவனிடத்திலேயே சுருதியாலுபஸம்ஹாரஞ்
சொல்லப்படுகிறபடியால் பிரம்மம்வேறாஇல்லை என்றால்தயிர்நெய்முதலானதுகள் பாலிலுண்
டாகியும்பாலிலேயேலயிக்காமலிருப்பதுபோல்ஸூஷுப்தனிடத்திலுண்டானவிகாரங்களுக்கு
துரீயனிடத்தில்லயமாகும், ஸூஷுப்தனைக்காட்டிலும் பிரம்மம் அதிகமென்று அடிக்கடிசொ
ல்லியிருக்கிறோமல்லவா, ஸூஷுப்தனிடத்தில் பிரம்மம்ஸத்துதேஜஸ்ஸு முதலானசப்தங்
கள்பிரயோகித்திருப்பதால் அவனைத்தவிர பிரம்மம்வேறாஇல்லையென்றால் அன்னமயப்பிராண
மயாதிகளிலும் பிரம்மசப்தங்கேழ்வியாகிறபடியாலதுகளையும் பிரம்மமென்றே சொல்லவே
ண்டியவருமே, ஆகையால்சுவர்காதிகளிலுள்ளதேவாதிகள் ஸகுணேசுவரனிடத்திலுண்டான
வர்களானபோதிலும்நிற்குணப்பிரம்மமான்தன்னிடத்தில்லயத்தையடையுவதுபோல்உத்பத்தி
காரணத்தைக்காட்டிலும் லயகாரணமன்னியமென்று ஊஹிக்கத்தக்கனது, இப்படிசொல்லா
விட்டால் ஒருவனுக்கும்மோக்ஷம்கிடையாது (சச) பிரம்மம் ஏகமானதால்காரியமாகபரிணமி
த்தபோதுசூன்னியமாய்விடும், இந்தகுத்தம்வராமலிருக்கவேண்டிதற்காக பிரம்மத்தைநாங்கு
பாதமாகச்சொல்வோமேயெனில்காரணம்நிரவயவமென்ற சப்தந்துக்குகோபம்நேரிடும்,பிரம
மம்அவயவத்துடன்கூடினதானாலப்போது ஸகுணமாகும், நிற்குணமென்றல்லவா சகலசுரு
திகளிலும சொல்லப்படுகின்றன, ஆகையாலிரெண்டுவிதத்திலும் நேரிடுகிறபிரபலமானகுத்தத்
தைவித்துவான்களாலும் பரிகரிக்கமுடியாது என்றால்பிரம்மத்துக்கு நாலுபாதம்சுருதியாலே
யேபிரஸித்தமாயிருப்பதால் சூன்னியத்துவம் நேரிடாது,ஜோதிஸ்ஸூத்திரத்தால்நிற்குணத்து
வத்தைதடையன்றியில்முன் நன்றாகசொல்லியிருப்பதால் அந்தஅவயவமுள்ளதுஸகுணமாகா
அகாரியரூபமானபாதம்மாத்திரம் ஸகுணமானகையால் மூன்றுபாதங்களுள்ளசுத்தஅமிர்தப்பி
ரம்மம்நிற்விகாரமாகவே விளங்குகின்றன, மாயாவிமுதலானவர்களிடத்தில் சுவரூபத்துக்கு

கேடன்ரியில் அனேகவித ஸிரிஷ்டிகாணுவதுபோல் ஆத்மாவிடத்திலும்கூடும், ஸுஷுப்தவா
தியின்பக்ஷத்தில் ஏகமேகாரணமாகையால் நிற்குணத்துவம்முதலானது ஸம்பவிக்கஇடமில்லா
த்தனுலும்சொல்லிய குத்தங்களுண்டு,மூன்றுஜீவனுகிலும்மூன்று ஈசனுகிலும் ஒரேபரமாத்மா
வென்றதேவதையேசகலததுடன் கூடி இருக்கின்றன்வல்லவா ஆகையால் நம்முடையபக்ஷத்தில்
யாதொருகுத்தமுமில்லை (சுடு) அந்தபரமாத்ம தேவதைக்குகாணமில்லாத்தனுலீக்ஷிதிருதுவ
மில்லைஎன்ருல்நாலுபாதம் சொன்னதுனுல்குத்தமில்லைஎன்றுமுன்னேசொன்னுேமே,வித்தியா
மயமானகரணமுள்ளதாயும்மாயாமயமான கரணமத்ததாயும் இருப்பதால் அத்துவயசித்கன
மான அந்தவஸ்துவிடத்தில் விருத்தங்களானதர்மத்திணிருப்பும்தர்ப த்தினில்லாமையும்இரெ
ண்டும்ஸித்தித்துது,பிரம்மம்முக்திஸ்வரூபமாகையால் சுவதந்திரம்அதுஎப்படிஜீவத்துவத்தை
அடையுமெப்படி ஸம்ஸாரத்தில்பெந்தமதுக்குண்டாகும் என்ருல் ஆகைவல்லியமென்ற இரெ
ண்டாவதுடன் கூடியிருக்குகையானது நிஷ்களப் பிரம்மத்துக்கு லீலேபேதவிர ஒருபலத்தை
அபேக்ஷித்தில்லை, எப்படிஸகுணேசனுக்கு தனக்குஹானியன்றியிலேலோகமாக இருப்புலீலே
யோஅப்படிஅரியத்தக்கது ( சகூ ) மந்தமத்தியம உத்தமங்களான ஞானவிஞ்ஞானஸம்மியக்
ஞானங்களை ஜீவர்களுக்குதாரதம்மியமாகச் செய்ததனுல பிரம்மத்துக்குவைஷம்மியமும்எல்
லோருக்குமனுபவத்துக்கு வருமைனுல்தயவென்ற உருக்கத்தினில்லாமையுமிரெண்டு குத்தம்
நேரிடுகின்றனவென்ருல் சிரவணம்மனன நிதித்தியாஸனமென்ற அவரவர்சள்கர்மதாரதம்மிய
த்தைஅபேக்ஷித்துக்பிரம்மம்ஞானதாரதம்மியத்தைஉண்டுபண்ணுகிறபடியாலும்உத்தமாதிகா
ரிக்கனுபவம்வருகிறபடியாலும் சொல்லியகுத்தங்களில்லை, எவனெப்படி உபாஸிக்கிருனே
அவனுக்கப்படியாகுமென்று சுருதிஸ்மிருதிகளால் மனம்போல்வாழ்க்கை என்றும்சொல்லினு
ல்தாரதம்மியம் ஜீவகர்மத்தை அபேக்ஷித்ததேதவிர பிரம்மத்தை அடுத்ததில்லை மேகம்போ
லென்றும் உபமானம்சொல்லப்பட்டுது, ஆனுல் ஆதியில் பிரம்மத்தைத்தவிர இரெண்டாவது
கர்ம்மமில்லாத்தனுல்கர்மத்தை அபேக்ஷித்துதெனறு சொல்லக்கூடாதென்ருல் சாஸ்த்ரம்
ஜீவனீசன்கர்மமிதுகள் அனுதிகளாகையால்குத்தமில்லை, இப்படிஇல்லாதபக்ஷத்தில் சாஸ்த்ர
முபயோகமத்ததாகும் பிரம்மத்தின் மூச்சுக்காத்துக்களேசாஸ்த்ரங்களென்று சுருதிஸ்மிருதி
களில் அரியப்படுகிறபடியாலும் அனுதித்துவமே ஸித்தித்துது, முந்தியபாதத்தில் சொல்லிய
படிஇந்த்அனுதித்துவம் உபசாரமாத்திரமாயிருந்தபோதிலும் சித்சக்திவிசிஷ்டமானபரப்பிரம்
ம்மம்முக்கிய அனுதியாகையால் அதினீக்ஷணகர்மமமுக்கிய அனுதியாகும், ஆனுல்பிரம்மத்
துக்கேசொல்லியகுத்தம் வந்துதென்ருல் வியவகாரதெசையை அபேக்ஷித்து லீலனுலேயே
தவிரபரமார்தமில்லை ஆகையால்எவ்வளவும்குத்தமில்லை(சஎ)இப்படிஅப்பயதீக்ஷிதருல்மொழி
பெயர்க்கப்பட்ட தத்துவஸாருயண சந்திரிகையின் ஞானகாண்டத்தில் - உ - வது பாதத்தில்
௬-வது அத்தியாயம் முற்றிற்று.

## எ-வது அத்தியாயம்.

ஸாங்கியர்கள் யோகர்கள் ஸுஷுப்தர்க ளிந்தமூன்றுபேர்களாலும் ஒப்புக்சொள்
ளப்பட்ட அவித்தை மாயை சுஷுப்தி இந்தமூன்றும் அசேதனமாகையால் ஸிரிஷ்டிக்கமாட்
டாது ஆகையாலந்தமூன்றுபேர்களும் தள்ளத்தக்கனவர்கள்தான், ஜீவேசுவருதிகளுடையபிர
விருத்திக்கு பிரம்மமேஹேதுவாகையால் அத்வைதமானப்பிரம்மமேகாரணமென்றுநிச்சயம்
ஆனுல் அசேதனமான புல்லுப்பாலாவதுபோலும் ஜலம்போகிறதுபோலும் அசேதனமான
அவித்தைமுதலானதுகளுக்கு ஸிருஷ்டிகருத்திருத்துவம் வரலாமென்ருல் பசுவுக்குக்குடுத்த
புல்லுத்தவிரமைத்ததனுல் பாலுண்டாகாமைனுலும பசுவின்குட்டிஊட்டினதனுலுண்டாகிற
படியாலும்ஸம தளத்தில்ஜலம்போகாமைனுலும் பள்ளத்தில்போகிறபடியாலும்சொல்லியஹே



துசரியில்லை, ஜீவேசுவரர்களும் பிரம்மத்தைதவிரவேரையா கிசுவாதந்திரியத்துடன்இருப்பில்
லாத்தனுல் பிரவிருத்தியில்சுவதந்திரற்களல்ல,பிரம்மம்தன்மகிமையிலேயேஇருக்கிறபடியால்
வேரை அதிஷ்டானமில்லை அதுனுல்சுவதந்திரம்அன்னியஅபேக்ஷையத்தது,பாமார்ததெசையை
அபேக்ஷித்து நிவிருததியும் விய்வகாரதெசையை அபேக்ஷித்து பிரவிருத்தியுமிருக்கின்றன,
ஸாங்கியயோகஸுஷுத்தர்களுடைய இஷ்டத்துக்காக அவர்களின்மதபபிரசாரமொப்புக்கொ
ண்டாலும் ஒருவருக்கும்எவ்வளவும்பிரயோஜனமில்லை,பங்குவானவன் அந்தகனைப்போலவும்
அயக்காந்தமானது இலும்பைப்போலவும்மாயையானது சேதனத்தையும் பிரவிருத்திப்பிக்க
லாமென்ருல்அந்தமாயைமுதலானதுகளுக்கு அங்கித்துவமில்லாமைனுல் வைஷம்மியமிருப்ப
தனுலும் ஞானசக்தியில்லாத்தனுலும் பிரவிருத்திக்கவும் பிரவித்திபபிக்கவும் இடமில்லை,அந்
தசின்மயமானஞானசக்தியானது நிர்விசேஷப்பிரமத்துக்கே சுருதிஸ்மிரிதிகளில்சொல்லப்பட்
டிருக்கின்றனவேதவிர ஜீவேசாதிகளுக்காவது ஆதிகளினுபாதிகளுக்காவது சொல்லப்பட
வில்லை,ஜாக்கிரத்முதலானமூன்று அவஸைதகளிலும் உபாதிகளையும் அபிமானிகளையும் தள்ளி
ஸாக்ஷியான சின்மாத்திர ஸதாசிவனைத்தானே முடிவாகச்சொல்லி இருப்பதால் ஸாங்கிய
ஸுஷுத்தர்கள் சுருதியில் தள்ளப்பட்டே இருக்ருர்கள், வேரைவிதமாயும் தள்ளப்பட்டிரு
க்கின்ருர்கள் எப்படி எனில், ஸுஷுத்தவாதி ஏகாத்மவாதியாகையாலவன் பக்ஷத்தில்
தப்பியதாபகபேதமில்லை நம்முடைய பக்ஷத்தில் ஸத்துவம் தப்பியமாகவும் ரஜஸுதாபக
மாகவும் பேதமிருப்பதால் ஸுசிதமாச்சுதென்று ஸாங்கியர்கள் ஸுஷுத்தர்களை நிருகரிச்கி
ருர்கள ஸாங்கியர்கள் சொல்லுகின்ற ஸத்துவரஜோகுணங்கள் அசேதனமாகையால் தப்பிய
தாபகத்துவங்கூடாது நம்முடைய பக்ஷத்தில் ஸூரியன் தாபகனென்றும் ஜிவனுடன் கூடிய
தேசம் தப்பியமென்றும் வியுவகாரதெசையில் பேதமிருப்பதாலு சிதமென்று சுஷுத்தர்கள்
ஸாங்கியர்களை நிருகரிக்கிருர்கள் இதில் நாம் சொல்வது என்னவென்ருல் அவர்களொன்று
க்கொன்று சொல்லிக்கொண்டகுத்தங்கள் சரியாயிருப்பதால் வியவகாரதெசையில் பரமார்த
மாக அவித்தை என்றகர்மம்தாபகமென்றும் தேகமுள்ள ஜிவன்தப்பியனென்றும்தீர்மானிப்ப
தே உசிதமாயிருக்கின்றன. (சஅ) ஹிருஸ்வமானபரிமண்டலத்திலிருந்து மஹத்தும் தீர்கமு
மெப்படி யுண்டாகின்றனவோ அப்படி சேதனத்திலிருந்திந்த காரியமெல்லாமுண்டாகின்றன
அணுவானது பரமாணுவிடத்திலிருந்துண்டாவதுபோல் திரியணுகாதியான சகலகாரியமும்
சேதனமானபிர்ம்மத்திணிடத்திலேயே யுண்டாகின்றன வென்றதிலெவ்வளவும் விருேதமில்லை,
(சகூ) வாயுவினணுக்களில் ஆதிஅதிரிஷ்ட கர்ம்மமிருந்தது அதுனுல் சகலமும் உண்டாச்சு
தென்று தார்கிகர்கள் சொல்வது அசேதனவாதமாகையால் சரியில்லை, நித்திய பிரவிருத்தியா
லுல் பிரளயமில்லை நித்தியப்பிரளயமானுல் பிரவிருத்திஇல்லை, ஆகையால் பரமாணுவும் கார
ணமாகாது காரணத்தைக் காட்டிலும் காரியம் ரூபாதிகளுடன் கூடினதாயும் ஸ்தூலமாயும்
அனித்தியமாயும் காணப்படுகிறபடியால் வைசேஷிகர்கள் முதலான தார்கிகற்களுடைய மத
மும் அயுக்தந்தான் மூர்த்திகளுக்குவிருத்திக்ஷயங்களும்நேரிடுகிறபடியால் இந்த அணுகாரண
வாதத்தை பெரியோர்களிலொருவருலாவது எடுத்துக்கொள்ளாமைனுலும் இந்தவாதம் மிக
வும் அஸத்துதான் (ருய) தேஜஸுமுதலான பூதங்களும் ரூபம் முதலானதன்மாத்திரைகளும்
ஒன்றுக்கொன்று சேர்கைனுல் ஸமுதாயத்தில் காரியமுண்டாச்சுதென்று சொல்லுகின்ற ஸள
ௌத்தமதமும் அஸத்துதான் ஏனென்ருல் அந்த பூதாதிகள் ஜடமாகயாலும் அந்த அவித்தைமு
தலானதுகள் மேலுக்கு மேலுத்பத்திக்குமாத்திரம் காரணமாகுமே தவிரசேற்க்கைக்குகாரண
மாகாதபடியாலும்மேல் க்ஷணத்தை அடையும்போதுகிழக்ஷணத்துக்குநாசம்வருவதாலும்ஓய்
விதியேஸௌகதமதம் சரியில்லைஎன்று அரியும் (ருக) வைனுசிகசமயத்தில்பிரதிஸங்கியாநிருே
தமென்றும் அப்பிரதிஸங்கியா நிருேதமென்றும் சொல்லப்பட்ட இரண்டுவித நாசமும் அவி

த்தையாலும் இல்லை ஸம்மியக்ஞானத்தாலுமில்லை ஆகாசத்திலும் ஸமமாககாணுகிறபடியா
ல் அதை அவஸ்துவாக அவர்கள் சொல்வதும் சித்திக்கவில்லை (௫௨) ஸத்திலிருந்து அஸத்தும்
அஸத்திலிருந்து ஸத்துமுண்டாகமாட்டாது அப்படியானால் முக்தனும்ஜன்மத்தையடையுவா
ன்இதனால் ஸத்காரியவாதம் வந்துவிட்டதே என்றால்வரட்டும் அம்சாம்சிகளான கூடஸ்த பிர
ம்மங்களுக்கு காரியகாரணத்துவத்தை நாமு மொப்புக்கொண்டே இருக்கிறோமல்லவா சபள
மான அசேதனகாரியத்துக்கு ஸத்தே உபாதான காரணமென்றுசொல்லுகின்றவாதம் மட்டும்
நமக்குவிரோதமேதவிர வேறொயில்லை, (௫௩) விஞ்ஞானவாதியான பௌத்தன் பாஹியார்தங்
களில்லை என்று சொல்லுகின்றான் வியவகாரத்திலெங்கும் காணுகின்றபடியாலது யுக்தமில்லை,
சுவப்னத்துக்கும் ஜாக்கிரத்துக்கும் வெகுபேதங்காணுகிறபடியால்இதுசுவப்னதியைப்போலா
காது (௫௪) பரமார்த்ததெசையில் பாஹியஅர்த்தங்களில்லைஎன்று ஸூத்திரக்காரரேசொல்லு
கின்றார், சுவப்னத்தில்காணுகின்ற விசேஷமில்லாததனாலும் எவ்வளவும் ஸுஷுப்திஇல்லா
த்தனாலும் துரீயமான அந்தபரமார்த்தஸ்தலத்தில் ஜாக்கிரசுவப்னசுஷுத்திவசனங்கள் வியர்
தந்தான் (௫௫)ஜீவன்அஜீவன் அஸிருவம்ஸம்வரம் நிர்ஜரம்பெந்தம் மோக்ஷமென்றஏழுபதார்
த்தங்களுமொருதர்ம்மிஇடத்தி லிருக்கிரதாகச்சொல்லுகின்ற விவஸனஸமயத்தில் அஸம்ப
வாதிதூஷணம் சகலஜீவர்களுக்கில்லைஎன்றும் சரீரபரிமாணன் ஜீவனென்பதிலும் மோக்ஷாவ
ஸ்தயிலும் விரோதமில்லாத்தனாலும் ஆகிமத்திகளிலும் ஜீவன் நித்தியனுகிரபடியா லதுசரிஇ
ல்லை இது சுஷுப்தவாதத்திலும் ஸமானமாகையா லதுவும்சரியில்லை (௫௬) ஸகுணேசுவரனு
க்கு ஜீவகாரணத்துவமில்லாத்தனாலும் இரண்டுபேர்களும் தத்துவம்பதவாச்சிய அர்த்திகளாக
தள்ளப்பட்டிருப்பதாலும் ஸர்வஜ்ஞ கிஞ்சிஞ்ஞர்களுக்கு ஸம்பந்தமில்லாத்தனாலும் பிரம்ம
காரியமானஜீவனுக்கு ஈசுவரகாரியத்துவத்தின்கூடாமைனாலும் ஜீவனத்ததேகத்தில் போகங்
காணுத்தனால் ஜீவனிடத்திலேயே இந்திரியங்களிருப்பதாலும் மாகேசுவரவாதிகளுடையஸம
யமும் அஸமஞ்சஸந்தான், மகேசுவரனுக்கு தேகமுண்டென்றால் நாசம்வரும் தேகமில்லைஎன்
றால் சர்வஞ்ஞத்துவமில்லை, பிரம்மத்துக்கொவென்றால் அசரீரமாயிருந்தபோதிலும் கடபடாதி
களில் காணுகின்ற ஸச்சிதானந்தரூபத்தால் நிர்விசேஷஸர்வஞ்ஞத்துவமிருப்பதால் குத்தமி
ல்லை,ஜீவாளின்புண்ணியபாபங்களை அரியுகிர ஸஸுவிசேஷஸர்வஞ்ஞத்துவமல்லவா சரீரத்தை
அபேக்ஷித்துக்கொண்டிருக்கின்றன, ஆகையால் மாகேசுவாஸமயமும் சரிஇல்லை, (௫௭) நிர்கு
ணப்பிரம்மத்திலுண்டானஜீவனை ஸகுணவாஸுதேவரிடத்திலுண்டானதாக பாகவதர்களான
பாஞ்சராத்திரமதஸ்தர்கள் சொல்லுவதனாலும் ஸங்கர்ஷணப்பிரத்தியும்ன அனிருத்தர்களான
ஜீவன் மனது அகங்காரங்களுக்கும் கிரமமாகஉத்பத்தியும் ஞானத்தில் ஸாம்மியமும் ஒப்புக்
கொண்டிருப்பதனாலும் உபாஸ்யத்துவம் முதலான் சிலகுணங்கள் கிரகிக்கத்தக்கதாஇருந்த
போதிலும் வியூகம் ஸாம்மியம் முதலான சிலகுணங்கள் கிரகிக்கத்தகாததாயிருப்பதாலும்
நாலுவேதங்களிலும் சிரேயஸ்ஸையடையாமல் சாண்டில்லியரானவர் அவர்களுக்குபயுக்தமா
னதந்திரத்தைஉண்டுபண்ணினரென்று வேதத்தைநிந்தித்திருப்பதாலும் அந்தபாகவத்மதம்மிக
வும் அஸத்துதான், (௫௮) இப்படி அப்பயதீக்ஷிதரால்மொழிபெயர்க்கப்பட்ட தத்துவஸாருய
ணசந்திரிகையில் ஞானகாண்டத்தின் உ-வது பாதத்தில் எ-வது அத்தியாயம் முற்றிற்று.

## அ-வது அத்தியாயம்.

சாந்தோக்கியோபனிஷத்தில் ஆகாசத்துக்குத்பத்தி சொல்லாத்தனா லுத்பத்தி
இல்லைஎன்று காணபுஜாளென்றதார்கிகாள் சொல்லுகின்றார்கள் தைத்திரியோபநிஷத்தி லது
க்குத்பத்திசொல்லப்பட்டிருப்பதாலும் அந்தஉபனிஷத்தும் முக்கியமாகையாலும் ஏகவிஞ்ஞா



னத்தால் ஸர்வவிஞ்ஞானபிரதிஞ்ஞையை அனுஸரித்து பிப்ரம்மத்திலடங்கிய ஸகலவிகாரத்துக்
குள்ப்பட்டபடியாலும் ஆகாசத்துக்குத்பத்திச்சிரவணம் முக்கியந்தான், இந்தஆகாசஉத்பத்தி
ஸித்தியினாலேயே ஸம்வற்கவித்தையில் சொல்லப்பட்டபடியால் வாயுமகானென்று மந்தர்கள்
பிரமித்துக்கொண்டிருக்கிர வாயுவுக்கு உத்பத்திஸித்திதது (௫௯) ஆகாசம்வரை சகலத்துக்கு
உத்பத்திஸித்தித்திருப்பதால் பிரம்மத்துக்கு உத்பத்திஇருக்கலாமென்று சங்கிக்கக்கூடாது
ஏனென்றால் ஸத்தும்அஸத்துக்குஸமானமாய்விடுமல்லவா,வாயுவிடத்தில்அக்கினியும்அக்கினி
யிடத்தில் அப்பும் அப்புனிடத்தில்பிரதிவியுமுண்டானதாக சுருதியேசொல்வதால் பஞ்சபூத
ங்களுக்கு உத்பத்திஸித்தித்தது (௬௦) ஈக்ஷிதிருத்துவம் முதலானஅடையாளம் சுருதியில் பிர
ஸித்தமாயிருப்பதால் பிரத்தியகாத்மாவே ஸிரிஷ்டிகர்த்தாவாவான், அசேதனங்களான ஆகா
சாதிவிகாரங்களுக்கும் தனக்குமுன்சித்தித்தசேதனத்துடன் கூடிஇருப்புதால் ஸிரிஷ்டிகர்த்தி
ருத்துவங்கூடும், பிரத்தியகாத்மா கரணமத்திருந்தபோதிலும் ஸூரியகாந்தம் தேஜஸ்ஸைப்
போல் ஸிரிஷ்டிபண்ணும் (௬௧) உத்பத்திகிரமத்துக்கு விபரீதமாகபிரளயம்படியேரிஎரங்குவ
துபோ லெண்ணத்தக்கது,பஞ்சபூதங்களைப்போ லிந்திரியங்களுக்கும்உத்பத்தி நாசம் ஸமமா
கையால் பூதஸம்பந்தப்பட்டதாலும்விஞ்ஞானமென்றபுத்திக்கும் மனதுக்கும்உத்பத்திநாசம்
சமந்தான், (௬௨) ஜீவனுக்கு ஜன்மமரணவியவகாரமானது சராசரதேகத்தைஅடுத்துதேகவிர
தேகம் நசித்தகாலத்தில் ஜீவன் பரலோகத்திலிருக்கிரபடியால் தேகமுண்டானகாலத்தில் பிர
வேசிக்கிறபடியாலும் அவனுக்கு ஜன்மமரணமில்லை, ஆனலிந்தஜீவாத்மா ஜன்மமத்தவனும
ல்ல ஏனென்றால் ஜன்மமில்லாவிட்டால் நாசமில்லைஅப்போதுபிரம்மம்ஜீவனிரண்டும் நித்திய
மாகும் அதனால் அத்வைதவாதத்துக்கு விரோதம்நேரிடும், தீப்பொரி திருஷ்டாந்தத்தால் பர
மாத்மாவிடத்திலுண்டானதாகச் சொல்லியிருப்பதால் ஜீவன் அன்னத்திலுண்டாகவுமில்லை,
தேகோத்பத்திக்குக்காரணமான அன்னம் நசித்தாலும் ஜீவன்அஜன்நித்தியனென்றிவ்விதலக்ஷ
ணங்கள் சொல்லியிருப்பதால் நசிக்கிரதில்லை, ஞானஸ்வபாவனாகிய பரமாத்மாவிடத்தில் ஜிவ
னுண்டானபடியால்தா னிதுகெடமிதுபடமென்று அரிவுள்ளவனாயிருக்கின்றான் (௬௩) இந்த
ஆத்மா அணுவென்று சுருதிஇருப்பதாலும் உத்க்கிராந்தி முதலானசுருதியிருப்பதாலும் ஜீவன்
அணுதான், அன்னியதாவானால் உத்க்கிராந்திபோக்குவரத்து மூன்றும் ஸித்திக்கமாட்டா,
ஆத்மாவுக்கு மகத்துவம் சுருதியில்சொல்லப்பட்டது மோக்ஷாதிகாரத்தை அபேக்ஷித்ததாகை
யா லிப்போது பெந்தாவஸ்தையில் மகத்துவங்கிடையாது, வால்னுணிமுதலானஸூக்ஷ்மப்பி
ரமாணம் சொல்லப்பட்டிருந்தபோதிலும் தேகத்திலேகதேசமான இரதயத்திலிருக்கின்ற இந்
தஜீவாத்மா துவக்கிந்திரியத்தின்ஸம்பந்தத்தால்தலைமுதல்கால்வரையுள்ளதேகமெங்கும்வியா
பித்து சகலவேதனையையும் அரியுகிறான், அங்கணமத்தியிலிருந்தாலும் தீபம் அதின்பிரபைஎங்
கும்வியாபிப்பதுபோலும் பூவிலுள்ளகெந்தமெங்கும் வியாபிப்பதுபோலும்மாரிலுள்ள சந்தன
த்தினாலுண்டான சுகம் யெங்கும் காணுவதுபோலும் ஆத்மா ஒருஇடத்திலிருந்தபோதிலும்
தேகத்திலெங்கும் வியாபித்தே இருக்கின்றான் கர்த்தா ஜீவனெனறும்கரணம்புத்திஎன்றும் வே
றாயாக உபதேசமிருப்பதால் ஆத்மாவுக்கும் புத்திக்கும் அபேதம் சொல்லவுங்கூடாது, இப்
படி எல்லாம் பார்க்கும்போது ஜீவன் வியவகாரதெசையில் அணுவேதவிரமகானில்லை வியவ
காரதெசையிலும் மகானென்று ஒப்புக்கொண்டால் சகலசாஸ்திரங்களும் வியர்தமாகும் (௬௪)
பிராஞ்ஞனென்ற பரமேசுவரனுக்கு ஸத்திய காமத்துவம்போ லிந்தஆத்மாவுக்கணுத்துவமா
னது தன்குணஸாரத்தாலேயே வந்ததே தவிர புத்தி ஜடமாகையாலதின்குணஸாரமென்று
சொல்லக்கூடாது எதுவரையிலாத்மாவுக்கு அணுத்துவமிருக்கின்றனவோ அதுவரைபுத்திக்கு
அதுண்டு இரதயத்துக்குள் ஜோதிபுருஷனிருக்கின்றானென்ற சுருதியாலும் ஆத்மா சேதனனெ
ன்றே அறியப்படுகிறான் புருஷனுக்குள்ள் சுக்கிலம்பாலனிடத்திலிருந்தும் யௌவனகாலத்தில்

